வது என்பது அவர்களிடமே கிடையாது. ஸ்திரீயானவள் எப்பொழுதும் கட்டுப்பட்டவளாகவே யிருக்கின்றாள். விவாகமாகும் பரியந்தம் தகப்பனுக்கும், விவாகமானபிறகு புருஷனுக்கும், அவன் பெற்றோர்களுக்கும், புருஷனிறந்தபிறகு புத்திரனுக்கும் கீழ்ப்படியக் கடமைப்பட்டிருக்கின்றாள். அவர்களுடைய தேசாசாரப் பிரகாரம் ஸ்திரீயானவள் விவாகமானதுமுதல் ஒருபுத்திரன் பிறந்து அவனுக்கு விவாகமாகி தன் வீட்டுக்கு ஒரு மருமகள் வரும் பரியந்தம் வீட்டிலேயே யிருக்கவேண்டியவளாகின்றாள். தன் வேலையை ஏற்றுக்கொள்ள ஒரு மருமகள் வந்தபிறகு தன் இஷ்டப்பிரகாரம் புருஷனுடன் வெளியே பல வேடிக்கைகள் பார்க்கச் செல்வாள். ஜப்பானிய ஸ்திரீகள் அநேகமாகத் தங்கள் நாட்டுடையையே அணிகின்றனர். ஆனால் சில அதிக மேல்நாட்டு நாகரீகமடைந்த வீடுகளில்மட்டும் ஸ்திரீகள் மேல்நாட்டுடைதரித்தும் ஐரோப்பிய ஸ்திரீகளைப்போல ஒரறைக்குள்ளாவது வண்டிக்குள்ளாவது புகும்பொழுது புருஷனுக்கு முன்புகுவதும் ஐரோப்பியஸ்திரீகள் மாதிரியே நடத்தப்படுகின்றனர். ஆனால் ஒரு தேசமானது அந்நிய தேசங்களோடு பழக்கத்துக்கு வரும்பொழுது அத்தேசத்து ஜனங்களில் சிலர் அந்நியதேசத்துப் பழக்கவழக்கங்களை அனுசரிப்பது ஆச்சரியமன்று என்றும், அநேக செல்வாக்குமிகுந்த குடும்பங்களிலும், மத்தியவகுப்பு கீழ்வகுப்பு ஜனங்களிடத்திலும், தங்கள் தேசவழக்கமே நிற்கின்றபடியால், சிலஸ்திரீகள் மட்டுமே பின்பற்றிவரும் அந்நியப்பழக்கங்களை ஜப்பானியரின் பழக்கமல்லவென்று சொல்ல சற்றுந்தயங்கமாட்டோம். ஜப்பானிய ஸ்திரீகள் வீட்டிலேயே இருக்கவேண்டியிருப்பதால் சிறுவர்களின் அபிவிர்த்தியைப்பற்றி அதிக கவனஞ்செலுத்த ஏதுவாகின்றது.

ஜப்பான் தேசத்தை முன்னிலைக்குக் கொண்டுவந்த தற்காலத்து ஜப்பானியரின் குணாதிசயங்களுக்கு அவர்களுடைய தாய்களே முக்கியகாரணமென்பது சொல்லாமலே விளங்குகின்றது.

சீனாதேசமானது ஸ்திரீகளின் அபிவிர்த்தியில் இன்னும் ஒருவிதமான முடிவுக்கு வாராமையாலும், சீனர் அநேகமாக எல்லா விஷயங்களிலும் ஜப்பானியரின் பழக்க வழக்கங்களையே பின்பற்றுகின்றபடியாலும் நாம் அதைப்பற்றி அதிகமாக விவரிக்கவேண்டிய அவசியமில்லை.

பிறகு இந்தியாவின் விவகாரத்தை யெடுத்துக்கொள்வோம். இந்தியாவிலும் ஸ்திரீகளின் அபிவிர்த்தி விஷயமாக பல தேசாபிமானிகள் உழைத்து வருகின்றார்கள். கவர்மெண்டாராலும் அநேகமாக எல்லாப்பட்டணங்களிலும் பெண்பாடசாலைகள் ஏற்படுத்தப்பட்டு ஆயிரக்கணக்கான பெண்கள் கல்வி கற்றுவருகின்றனர். அநேக ஸ்திரீகள் தங்கள் கல்வியைப் பூர்த்திசெய்து பெண்பாடசாலைகளில் உபாத்தியாய உத்தியோகத்திலிருக்கின்றனர். இன்னுமநேகர் தங்கள் கல்வியைப் பூர்த்திசெய்தானபிறகு வீட்டுவேலைகளிலேயே அத்திறமையைச் செலுத்துகின்றனர். இன்னும் நம் நாட்டுஸ்திரீகள் மேல்நாட்டாரைப்போல பல தொழில்களிலு மிறங்க வாரம்பிக்கவில்லை. நம் நாட்டில் ஸ்திரீகள் அபிவிர்த்தியை நன்மார்க்கத்தில் திருப்புவது தேசாபிமானிகளின் கடமையாயிருக்கின்றது. அவர்கள் நம் ஸ்திரீகளின் அபிவிர்த்தியை மேல்நாட்டு நடையிலேயே திருப்ப அபிப்பிராயங்கொண்டிருக்கிறார்களென்று நாம் கிஞ்சித்தும் நம்பவில்லை. எந்தநாட்டுப் பழக்கங்களையும்

நாம் கண்மூடித்தனமாய்ப் பின்பற்றமாட்டோம். நமக்கு நன்மைதரக்கூடியவைகளை மட்டும் எடுத்துக்கொண்டு மற்றவைகளை நீக்கிவிடுவோம். நம் தேசமானது உலகத்தில் மற்றெந்த தேசத்தையும்விட நாகரீகத்தில் முதன்மையாயிருந்தகாலத்தில் ஸ்திரீகள் கல்வி கற்றிருக்கவில்லையா? தற்காலத்தைவிட அதிக சுதந்திரமடைந்திருக்கவில்லையா? அப்பொழுது அவர்கள் தற்காலத்து மேல்நாட்டு ஸ்திரீகளைப்போல புருஷர்களுக்குப் போட்டியாகஎந்தத் துறையிலாவதுஇறங்கினார்களா? சீதை; துரோபதை, சகுந்தலா இவர்கள் கல்வியடைந்தவர்களில்லையா? ஆயினும், இவர்கள் ஸ்திரீகளின் தன்மைக்கு உலகத்தோருக்கு ஒருதாரணமாக நிற்கவில்லையா? தற்காலத்தில் கல்வியின் பிரயோசனமானது உத்தியோகமேயென்றநேகரால் எண்ணப்படுகின்றமையால் ஸ்திரீகளும் தங்கள் கல்வித்திறமையை உத்தியோக மார்க்கத்திலேயே செலுத்தவேண்டுமென்றேற்படுகின்றது. நம் ஜனங்களின் மனதில் கல்வியானது உத்தியோகத்துக்கு மட்டுமல்ல விவசாயம், கைத்தொழில், வியாபாரம் முதலிய எல்லாத் தொழில்களுக்கும் அவசியமானதென்றேற்படும்பொழுது, ஸ்திரீகளுக்கும் அவர்களுடைய இயற்கைத்தொழிலாகிய வீட்டுவேலைகளைப்பார்ப்பதற்கும் கல்வி அவசியமென்றுதானே ஏற்படும். ஸ்திரீகள் கல்வி கற்கவேண்டிய தவசியமென்று நாம் பலமுறையும் சொல்லியாய்விட்டது. ஆனால், அவர்கள் தங்களுடைய இயற்கைத்தொழிலைத் தவிர்த்து வேறு தொழில்களில் பிரவேசிக்காமலிருப்பதே தேசத்துக்கு க்ஷேமத்தை விளைவிக்கக்கூடியதென்று நம் ஜனங்களுக்கும் தேசாபிமானிகளுக்கும் பன்முறையும் வற்புறுத்த விரும்புகின்றோம்.

## இயற்கை அற்புதங்கள்
## WONDERS IN NATURE



### நிழலும் கிரகணங்களும்
### SHADOWS AND ECLIPSES

வெயிலில் நடந்து செல்லுங்கால் நாம் நமது நிழலைக் கண்டிருக்கலாம். நமது வீட்டில் விளக்கின் அருகாமையில் சென்றால் நமது நிழல் சுவற்றில் விழுவதையும் நாம் கண்டிருக்கலாம். இந்த நிழலானது இவ்வளவு ஸாதாரணமாக இருப்பதால் இது எப்படி உண்டாகின்றது, இதன்கூடவே உள்ள மற்றைய விஷயங்கள் யாவை, இதனால் விளையும் இயற்கையான அற்புதத்தோற்றங்கள் யாவை, இதனால் நாம் நிழல் உண்டாக்கும் வஸ்துவின் விஷயமாக என்ன விஷயங்களை அறியக்கூடும் என்ற இதுபோன்ற விஷயங்களை விசாரிக்காமலே இருக்கிறோம். இவ்விஷயங்களை இங்கு எடுத்து விசாரித்துநிழல்கள் இயற்கையில் இவ்வளவுஅற்புத தோற்றங்களை விளைவிக்கின்றன, அவைகளின் ஸஹாயத்தால் நாம் தெரிந்து கொள்ளக்கூடும் விஷயங்கள் இன்னவை, என்பவைகளை நன்கு எடுத்துக்காட்டுவோம்.

முதலில் நிழல்கள் உண்டாகும் விதத்தையும், அவைகளின் ஸ்வரூபத்தையும் விசாரிப்போம். ஸூர்யன், சந்திரன், விளக்கு முதலிய பிரகாசிக்கும் வஸ்துக்களின் எதிரே ஏதாவது ஒரு வெளிச்சத்தை மறைக்கும் வஸ்து வருமாயின் அதனால் வெளிச்சம் தடைபடுகின்றது. வெளிச்சம் அது உண்டாகும் இடத்திலிருந்து நேர்கோட்டின் மூலமாகவே எல்லாப்பக்கங்களிலும் பரவிசெல்வதால் இம்மாதிரி மறைக்கும் வஸ்துக்களால் தடுக்கப்பட்டு நிழல் உண்டாக இடங்கொடுக்கின்றது. வெளிச்சம் தடைபட்ட மாத்திரத்தினாலேயே நிழல் உண்டானபோதிலும் அது நமது கண்ணுக்குப்புலப்பட்டுவிடாது. உண்டாகும் நிழலையும் அதன் சுற்றிலும் உள்ள அப்பாற்செல்லும் ஒளிகளையும் தாங்கும்படியாக ஒருதிரை அல்லது சுவர் போன்றது இருக்கவேண்டும். மேலும் மறைக்கும் வஸ்து வெளிச்சத்திற்கும்திரைக்கும் நேராக இடையில் இருக்கவேண்டும். அப்பொழுது தான் நிழல் திரையில் விழ வெளிசசம்படும் பாகம் பிரகாசமாயும் நிழல்பாகம் கறுப்பாயும் நமது கண்ணுக்குப் புலப்படும். இம்மாதிரியான திரையில்லாததால் தான் திறந்தவெளியில் விளக்கைவைத்துவிட்டு நாம் அதன் அருகேநின்றால் ஆகாயத்தில் நமது நிழல் தெரியாததற்குக்காரணம். ஓர்வஸ்து நமது கண்ணுக்குப் புலப்படவேண்டுமாகில் அதிலிருந்து ஒளிவந்து நமது கண்ணில்பட்டால்தான் முடியும் என்பது உண்மையாக இருக்க நிழலிலிருந்து ஓர் ஒளியும் வாராதிருக்கும்பொழுதே அது புலப்படுவானேன் என்றசங்கை பிறக்கலாம். நிழலைச் சுற்றிஉள்ளபாகம் பிரகாசிப்பதாலும், அது படும்பாகம் மாத்திரம் பிரகாசிக்காததாலும் நிழலானது சுற்றுமுள்ள பாகத்தைவிட வேற்றுமைப்பட்டிருக்கின்றது. இந்த வேற்றுமையால்தான் அது நமது கண்ணுக்குப் புலப்படுகின்றது.

நிழல் உண்டாகும் விதத்திலிருந்து அதன் கூடவே உண்டாகும் மற்றையதோற்றங்களை விசாரிப்போம். ஒளிபுறப்படும் இடம்சிறுப்பொட்டாக இருக்குமாயின் அதிலிருந்து உண்டாகும் நிழல்போகப்போகவிரிந்துகொண்டேபோகும். இதேமாதிரிதான் ஒளி உண்டாகும் இடத்தைவிட மறைக்கும் வஸ்து பெரிதாக இருக்கும் இடத்திலும். மறைக்கும் வஸ்துவைவிட ஒளி உண்டாக்கும்வஸ்து பெரிதாக இருப்பின் ஓர்வித அற்புதம் உண்டாகின்றது. வஸ்துவின் நிழல் போகப்போகக் குறுகலாகி முடிவில் ஓர் புள்ளியாகிவிடுகின்றது. இந்தவிடத்தில் வஸ்துவின் அருகாமையில் விளக்கிற்கு மறுபுறமாக ஓர் அட்டை அல்லது பலகையைப் பிடிப்போமாகில் அதின் மத்தியில் கறுப்பான சாயை பாகம் ஒன்றும் அதைச்சுற்றி மங்கலான சாயைபாகம் ஒன்றும் காணப்படும். இந்த மங்கலான பாகத்திற்கே நுறைநிழல் என்று பெயர். இந்த அட்டையை வஸ்துவைவிட்டு தூர எடுத்துச் செல்வோமாகில் குறைநிழல் பாகம் வரவர அகன்றுகொண்டும் நிழல்பாகம் வர வரக் குறைந்துகொண்டும்வரும். முடிவில் ஓர் இடத்தில் நிழல்பாகம் ஓர் பொட்டாக குறைநிழல பாகமே முழுவதும் பரவிவிடும். அதற்கப்பாலும் அட்டையைக்கொண்டு செல்வோமாகில் குறைநிழல் மாத்திரமே காணப்படும். இந்தத்தோற்றம் உண்டாவதன் காரணத்தை நாம் எளிதில் காணலாம். அட்டையில் குறைநிழலும், நிழலும் ஸம அகலத்தோடு இருக்கும் தருணத்தில், குறைநிழல் மேல்பாகத்தில் கண்ணை வைத்து விளக்கைநோக்கினால் விளக்கின் கீழ்பாகமும், அதன் கீழ்பாகத்திலிருந்து நோக்கினால் விளக்கின் மேல்பாகமும், நிழலில் கண்ணைவைத்துநோக்கினால் விளக்குமுழுவதும் மறைந்தும் காணப்படும். இதனால் குறைநிழல் விளக்கின் வெளிப்பாகத்து ஒளி அது புறப்படும் இடத்திற்கு நெருங்கியுள்ள நிழலுட்புகுந்து அதை ஒருவாறு பிரகாசப்படுத்துவதால் உண்டாகின்றது என்பது விளங்கும். அட்டைமுழுவதும் குறைநிழலாக இருக்கும் இடத்தில்நடுவிலிருந்து விளக்கைநோக்கினால் அது சுற்றிலும் பிரகாசம் உடையதாகவும் மத்தியில் மறைக்கும் வஸ்துவால் மறைக்கப்பட்டதாகவும் காணப்படும். இதற்குக் கங்கணத்தோற்றம் என்றுபெயர். ஆகவே மறைக்கும் வஸ்துவை விடப் பெரிதாகிய ஒளிவிடும் வஸ்துவால், நுறைநிழல், நிழல், கங்கணத்தோற்றம் ஆகிய மூன்று தோற்றங்கள் உண்டாக்கப்படுகின்றன. இம்மூன்றையும் இங்குள்ளசித்திரத்தில் காட்டப்பட்டிருக்கின்றது.

ஸாதாரணமாக விளக்கு வெளிச்சத்திலிருந்து உண்டாகும் நிழல் மூலமாக அநேக அற்புதத் தோற்றங்களை உண்டாக்கலாம். நமது இரண்டு கைகள் அதன் விரல்கள் ஆகிய இவைகள் மூலமாக மிக அற்புதமான நிழல்கள் சுவற்றில் விழும்படி செய்யலாம். இப்படி விழும் நிழல்கள் வௌவால்போலவும், முயல்போலவும், கிளிபோலவும், ஒட்டகைபோலவும் தோற்றும்படி செய்யலாம். நிழலின் அற்புதத்தைக்கொண்டு தான் நிழல், பொம்மலாட்டம் முதலிய அற்புதத்தோற்றங்கள் உண்டாக்கப்படுகின்றன.

ஸூர்யன் நிழலால் உண்டாகக்கூடிய அற்புதத்தை விளக்குவோம். ஜர்மனிதேசத்தில் ஹார்ஸ் என்ற ஓர் மலை இருக்கின்றது. அதில் பிரோகன் என்றஓர் உயர்ந்தகொடுமுடி உண்டு. அதன்மேல்மே

ற்குப்புறம் மேகம் இருக்கும் தருணத்தில் ஏறிவிட்டால் ஸூர்யோதயகாலத்தில் நமது நிழல் பெரிதாகப்பட்டு மேகத்தில் காணப்படுமாம். இது பார்வைக்கு பயங்கரமாக இருக்கும். இந்த அற்புதத் தோற்றத்திற்கு இதைப் பார்த்தவர்கள் பிரோகன் பிசாசம்எனப் பெயரிட்டு அழைத்தனராம். இதையும் சித்திரப்படத்தில் காட்டப்பட்டிருக்கிறது.

ஸூர்ய சந்திராதிகளால் பூமியில் உண்டாக்கப்படும் நிழலைக்கொண்டு நம்மால் ஏறி அளக்கமுடியாத கோபுராதிகளின் உயரத்தை ஒருவாறு கண்டுபிடிக்கலாம். தகுந்த ஸமயத்தில் மயிலைக்கோபுரத்தின் நிழல் அளவைக் கண்டுபிடிப்போம். அது 300 அடி என்று வைத்துக்கொள்ளுவோம். அதே ஸமயத்தில் நமது நிழலையும் அளப்போம். இது $8\frac{1}{4}$-அடி என்போம். நமது உயரம் $5\frac{1}{2}$-அடியாகில் பின்வரும் வழியாக மயிலைக்கோபுரத்தின் உயரத்தைக் கண்டுபிடிக்கலாம். $8\frac{1}{4}$-அடி நிழலை உண்டாக்க $5\frac{1}{2}$-அடி உயரமுள்ள வஸ்துவேண்டும். 300 அடி நிழலை உண்டாக்க $11/2 \times 4/33 \times 300$ அல்லது 200 அடி உயரம் உள்ள வஸ்து வேண்டும். அதாவது மயிலைக்கோபுரம் 200-அடி உயரம் என்று கண்டுபிடிக்கலாம் இம்மாதிரி ஸாதாரணமான விஷயங்களுக்கும் ஸூர்ய சந்திரர்களால் உண்டாக்கப்படும் நிழல் உபயோகப்படுகின்றது.

ஸூர்யனால் உண்டாகும் நிழலினாலேயே தான் பூமியில் இரவும்,சந்திரனுக்கு வளர்பிறை தேய்பிறையும் காணப்படுகின்றன. ஸூர்யன் ஒளி அஸ்தமனத்தின் பின்பு பூமியால் தடுக்கப்பட அப்பொழுது உண்டாகும் நிழலிலே நாம் இருப்பதுதான் நமக்கு இரவாகக் காணப்படுகின்றது. சந்திரன்மேல் ஸூர்யன் ஒளிபட அதனுள் அது ஊடுருவிச்செல்லாது தடைபடுகின்றது. ஆதலால் சந்திரனது பிரகாச பாகத்தில் ஓர் பங்கும், நிழலில் மூழ்கிக்கிடக்கும் பாகத்தின் பங்கும் சேர்ந்து தெரிவதே சந்திரன் பிறைக்குக் காரணம். இங்கு உள்ள நிழல் வேறு வஸ்துவில் திரையில் படுவதுபோலப் பட்டு இந்தத் தோற்றத்தை உண்டாக்கவில்லை. இந்த நிழலுள் மூழ்கிக்கிடக்கும் வஸ்துக்களாலேயே இத்தோற்றம் உண்டாகின்றது.

இந்த நிழல்கள் உண்டாகும் விதத்தினாலேயே தான் ஸூர்ய சந்திரர்களது கிரஹணங்களும் உண்டாகின்றன. ஸூர்யன் பிரகாசிக்கும் வஸ்து அதன் ஒளியை அதைவிடச் சிறிதாகிய பூமிதடுத்து நிழலை உண்டாக்குகின்றது. இந்த நிழல் எப்பொழுதும் பூமியிலிருந்து ஸூர்யன் இருக்கும் பக்கத்திற்கு நேர் எதிரான மறுபுறத்தில் நீண்டுநிற்கும். சந்திரன் பூமியைச் சுற்றிவரும்பொழுது இந்நிழலுள் பிரவேசித்துவிடுமாகில் சந்திரக்கிரஹணம் உண்டாகும். இது உண்டாகும்கால் பூமி சந்திரனுக்கும் ஸூர்யனுக்கும் சற்றேறக்குறைய நேராக இடையில் வரவேண்டும். அப்பொழுது சந்திரனும் ஸூர்யனும் எவ்வளவு பிரிந்திருக்கலாமோ அவ்வளவும் பிரிந்திருக்கவேண்டும். ஆனால் இவ்வாறு இந்த கோளங்கள் அகன்று நிற்பது பௌர்ணமியில்தான் முடியும். ஆகையால் சந்திரகிரஹணம் பௌர்ணமியில்தான் உண்டாக இடமுண்டு. மேலும் சந்திரன் பிரவேசிக்கக்கூடிய பாகத்தில் நிழலின் குறுக்களவு சந்திரனது குறுக்களவைவிட அரைப்பங்கு அதிகமாக இருக்கின்றது. ஆகையால் சந்திரக்கிரஹணம் குறைக்கிரஹணமாகவும், முழுக்கிரஹணமாகவும் நிழலில் முழுவதும் புகுந்து ஊடுருவிப்புறப்பட்டால் $1\frac{1}{4}$-அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கிரஹணமாகவும் இருக்கலாம். பூமி ஸூர்யனைவிட சிறிதாக இருப்பதால் இதற்குக் குறைநிழல் உண்டு. இதனுள் சந்திரன்பிரவேசிக்குமாயின் இதற்கு குறைநிழல் கிரஹணம் என்று பெயர். இதில் சந்திரன் ஒளி இழக்காது சற்று மங்கலாகும், அவ்வளவுதான். இதை நம்மவர் கிரஹணமாகவே மதிப்பதில்லை. பூமியைவிட சந்திரன்மிகச்சிறியதாக இருப்பதால், சந்திரக்கிரஹணம் பூமியில் ஓர் பாதிக்கு நன்றாகத் தெரியும்.

இனி ஸூர்ய கிரஹணத்தின் ஸ்வரூபத்தைப்பற்றிவிவரிப்போம். ஸூர்யன் பிரகாசத்தை சந்திரனும் மறைக்க அதுவும் நிழல் உண்டாக்குகின்றது. இதுவும் ஸூர்யன் இருக்கும் புறத்திற்கு எதிர்ப்புறத்தில் நீண்டு காணப்படும். இந்நிழல் பூமியின்மேல் விழுமாயின் நிழல் விழுந்த இடத்திற்கு ஸூர்யன் மறைந்துகாணப்படும். இதுதான் ஸூர்யகிரஹணம் என்னப்படும். சந்திரன் நிழல் பூமியின்மேல் விழ அது பூமிக்கும் ஸூர்யனுக்கும் சற்றேறக்குறைய நேராக இடையில் வரவேண்டும். ஆதலால் ஸூர்யனைவிட்டு எவ்வளவு விலகாமலிருக்கக்கூடுமோ அவ்வளவு நேராக சந்திரன் இருத்தல் வேண்டும். இவ்வாறிருப்பது அமாவாஸையன்றுதான் ஏற்படும்; ஆதலால் ஸூர்யகிரஹணம் அமாவாஸையன்று தான் உண்டாக இடமுண்டு.

சந்திரன் பூமியைவிட அதிகச்சிறிய வஸ்து. ஆகையால் ஸூர்யனால் இதன் விஷயமாக உண்டாகும் நிழலில் குறைநிழல், நிழல்,கங்கணத்தோற்றமுடைய

பாகம் ஆகிய இவைகள் காணப்படும். ஸாதாரணமாக சந்திரன் நிழலுள் குறைநிழல் நிழல் ஆகிய இப்பாகங்கள் பூமியில்விழும். இந்த ஸமயங்களில் நிழல்விழும் பாகத்தில் பூர்ண ஸூர்யகிரஹணமும் குறைநிழல் விழும் இடத்தில் குறைக்கிரஹணமும் இவைகளுக்கு அப்பாற்பட்ட விடங்களில் ஸூர்ய கிரஹணம் இல்லாமலும் இருக்கும். அபூர்வமாகச் சில ஸமயங்களில் குறை நிழல் மாத்திரமே விழலாம். அப்பொழுது இதன் மத்யபாகத்தில் கங்கணத்தோற்றம் உண்டாக அதற்கு கங்கணக்கிரஹணம் என்றுபெயர். மற்றையகுறைநிழல் பாகங்களில் குறைக்கிரஹணமும், இதற்கு அப்பாற்பட்டபாகங்களில் கிரஹணமே இல்லாமலும் இருக்கும். ஆகவே ஸூர்யகிரஹணம் மூன்றுவிதம், முழுகிரஹணம், குறைகிரஹணம், கங்கணக்கிரஹணம் ஆகிய இவைகளே.




இப்பொழுது சந்திரக்கிரஹணத்திற்கும் ஸூர்ய கிரஹணத்திற்கு உள்ள வேற்றுமை யாது என்பதைச் சற்று விவரிப்போம். ஸூர்யகிரஹணம் அமாவாஸையில் உண்டாகும், சந்திரக்கிரஹணமோ பௌர்ணமாவாஸையில்தான் உண்டாகும். ஸூர்யக்கிரஹணம் ஸூர்யன் சந்திரனல் மறைக்கப்படுவதால் உண்டாகும், சந்திரக்கிரஹணத்திலோ, அது பூமிநிழலில் மூழ்குவதால் ஒளி இழந்து கிரஹணத்தோற்றத்தை உண்டாக்குகின்றது. முன்னது பூமியின் ஓர் பாதியிலேயே ஓரிடத்திற்கு ஒருமாதிரியாகவும் மற்றவிடங்களுக்கு வேறு மாதிரியாகவும் தோற்றும். பின்னதோ பூமியின் ஓர்பாதிக்கு ஒரேமாதிரியாகத்தோற்றும். இதுபற்றியே ஸூர்யகிரஹணங்கள் வருஷத்தில் சந்திரகிரஹணத்தைவிட அடிக்கடி நிகழ இடமிருப்பினும் நமக்கு சந்திரகிரஹணங்கள் அதிகமாக உண்டாவதாகத் தோற்றுகின்றது. ஸூர்யகிரஹணத்தில் கங்கணக்கிரஹணம் உண்டு. சந்திரகிரஹணத்திலோ கங்கணக்கிரஹணமே ஒருபொழுதும் வாராது. அதற்குப்பதிலாக அதில் $1\frac{1}{4}$-அல்லது $1\frac{1}{2}$-கிரஹணங்கள் உண்டு. சந்திரக்கிரஹணகாலத்தில் ஒருவன் சந்திரனில் இருப்பதாக வைத்துக்கொள்வோமாகில் அவனுக்கு அப்பொழுது ஸூர்யக்கிரஹணம் உண்டாயிருப்பதாகத் தோற்றும். ஸூர்யக்கிரஹணகாலத்தில் அவனுக்கு பூமிக்கிரஹணம்உண்டாயிருப்பதாகத் தோற்றம்.

இப்படி பூமி, சந்திரன் ஆகிய இவைகள் நிழல்களால் உண்டாகும் கிரஹணங்கள் ஒவ்வொரு பர்வகாலங்களிலும் உண்டாகாதிருப்பானேன் என்றசங்கை பிறக்கும். இதற்குக் காரணம் ஸூர்யகதியும் சந்திரகதியும் ஒரேசமத்தில் இல்லாதிருப்பதே. இப்பொழுது ஓர் கடிகாரத்தை எடுத்துக்கொள்ளுவோம். அதற்கு இரண்டு முள் உண்டு ஒன்று வேகமாகவும் மற்றொன்று மெதுவாகவும் சுற்றுகின்றது. ஆதலால் இவை இரண்டும் சுற்றிவருகையில் கடிகாரத்தில் எந்தபாகத்தில் சேர்ந்து நின்றாலும் நிற்கும், அகன்று நின்றாலும் நிற்கும். கடிகார மத்தியத்தில் பூமி இருப்பதாகவும் சிறியமுள் நுனிக்கு நேராக வெளியில் ஸூர்யனும், பெரிய முள் நுனியில் சந்திரனும் இருப்பதாகக் கொள்வோம். சிறியமுள் வேகத்திற்கு ஸமம் சந்திரன்; 27-நாள்களில் பூமியைச் சுற்றிவருவது, பெரிய முள்ளின் மெதுவுக்கு ஸமானம் ஸூர்யன். 1-வருஷத்தில் பூமியைச் சுற்றிவருவது; ஆகவே இதிலிருந்து ஸூர்ய சந்திரர்கள் கதியில் எந்தப் பாகத்திலும் அவர்கள் சேர்ந்தாவது அகன்றாவது நிற்கலாம் என்பது விளங்கும். ஆகவே அவர்கள் கதியில் எந்தவிடத்திலும் அமாவாஸையும் பௌர்ணமாவாஸையும் உண்டாகலாம். ஆனல் இருவர் கதியும் ஒரேசமத்தில் இல்லாததால் பூமிநிழலும் சந்திரன்நிழலும் வெவ்வேறு புறத்தைநோக்கி நிற்கும். ஆனல் இவர்கள் கதிகள் சேரும் இரண்டு இடமாகி ராகு கேது ஸ்தானங்களின் அருகாமையில் பர்வகாலங்கள் உண்டானல் பூமிநிழல் சந்திரன்மேலாவது சந்திரன் நிழல் பூமிமேலாவது பட கிரஹணங்கள் உண்டாகும் ஆகவே ஸூர்ய சந்திர கதிகள் வெவ்வேறு ஸமத்திலிருப்பதால் எல்லாவிடங்களிலும் உண்டாகும் பர்வகாலங்களில் கிரஹணங்கள் உண்டாகா. அவர்கள் இருவரது கதியும் சேரும் இடங்களாகிய ராகு கேது ஸ்தானங்களில் உண்டாகும் பர்வகாலங்களிலேயே இந்த அற்புதத் தோற்றங்கள் உண்டாகும்.

முற்கூறிய விஷயங்களிலிருந்து சந்திரனது வளர்பிறை தேய்பிறைகளை கிரஹணங்கள்எனக் கொள்ளக்கூடாது என்பது வெளியாகும். இவை

சந்திரனது ஓர்பாகம் தனது நிழலிலேயே மூழ்கி மற்றையபாகம் ஸூர்யப் பிரகாசத்தினால் பிரகாசிக்க இவ்விரண்டும் சேர்ந்து நமக்குத்தோன்றும் தோற்றங்கள். இவை கிரஹணத்தைப் போல பூமி நிழலில் சந்திரன் ஒளி இழப்பதால் உண்டாவனவல்ல. மேலும் சந்திரக்கிரஹணம் சிற்சில பௌர்ணமியில்சந்திரன்கன்றாகப் பிரகாசிக்கும்கால் திடீரென்று, அதற்குவரும் ஓர்தோற்ற மாறுபாடு. வளர்பிறை தேய்பிறைகளோ அவ்வாறின்றி 15-அல்லது 16-நாளுக்கு ஒவ்வொருதரம் மாறிமாறி வந்துகொண்டிருப்பன.

ஆதலால் ஸூர்யனால் ஏற்படும் நிழலாலேயே கிரஹணங்கள் என்ற அற்புதத்தோற்றங்கள் உண்டாகின்றன. இவைகளை நம்மவர்கள் ஓர் சிறந்த ஸமயமாகக்கொண்டாடி லௌகீக விஷயங்களுக்குப் பாபம் என்றும், வைதிகமான ஜபம் முதலியவைகளுக்குத் தக்க ஸமயம் என்றும் கொண்டு இவைகளுக்குத் தக்கபடி ஸ்நானதிவிதிகளை ஏற்படுத்தி இருக்கின்றனர். இந்தத் தோற்றங்கள் நமக்கு நல்ல ஸமயங்களில் ஸம்பவிக்கும் உற்பாதங்களை உணர்த்துகின்றன. ஆகவே லௌகீகமாக இதை பாபஸம்பந்த ஸமயம் என்று கொண்டு தானம் முதலியன செய்து அதைப் போக்கடித்துக்கொள்ள விதிகள் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. இந்த ஸம்பவத்தின் விஷயம் மோக்ஷமார்க்கத்தில் முக்கிய ஸஹாயம்; ஆதலின் இது வைதிக ஸம்பந்தமானஜபாதிகளுக்கு நல்ல ஸமயம் என்று எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. உலகத்திலுள்ள ஸுகதுக்கங்களின் ஸ்வரூபம் இக்கிரஹணங்களால் நன்கு ஞாபகம் மூட்டப்பட இந்த ஸமயத்தில் ஸ்நானம்செய்து ஒருவன் ஸத்காலக்ஷேபம் செய்வனாகில் அவன் மனம் தெளியும் என்பதற்கு என்னஸந்தேகம்? இந்த ரகஸியத்தை அறியாமல் நம்மவரில் அநேகர் இப்பொழுது இக்கிரஹண காலங்களை ஒழுங்காகக்கொண்டாடுவதில்லை. இதனால் அவர்கள் முன்னுக்குவர சாஸ்திரம் ஏற்படுத்திய ஓர் மார்க்கத்தை அவர்கள் இழந்தார்களே ஒழிய விதித்த சாஸ்திரத்திற்கு யாதொரு குறைவும் இல்லை. இந்த ரகஸியத்தை அறிந்து நாமும் கிரஹண காலங்களை தவறவிடாது அவைகளில் தக்க ஸத்கால க்ஷேமாதிகள் செய்து நற்கதி அடைவோமாக.

# உழவுநூல்

## AGRICULTURE

(முன்தொடர்ச்சி)

உழுதற்கு கஷ்டமான நிலத்தைக் 'கடினநிலம்' என்றும் இலகுவானதை 'இலேசான நிலம்' என்றும் சொல்லுகிறது. மணற்பாங்கான நிலம், சுண்ணமுள்ள நிலம், இந்திரியப்பொருள் கலந்த நிலம் இவையெல்லாம் 'இலேசான நிலம்' என்று சொல்லப்படும். ஈரமான களிமண்ணானது மெதுவாயும் சவ்வாயுமிருக்கும். உலர்ந்துபோனால் கடினமாகும். ஆகையால் இவ்வகை நிலத்தை உழவேண்டுமானால் அதிக ஈரமாயும் உலர்ந்ததாயும் இல்லாத நிலைமையில் உழவேண்டும்.

களிமண்ணிலத்தோடு மண், சுண்ணம், இந்திரியப்பொருள்களைக் கலந்துகொண்டால் நிலம் விருத்தியாகும்.

**பூமியின் உஷ்ணத்தின் சம்பந்தா சம்பந்தம்.**—உஷ்ணத்தின்மிகுதி, குறைவு மாறுதல்களை நிலத்தில் நன்றாயறிய முடியாது. பூமிக்குக்கீழே போகப்போக,மாறுதல்கள் நன்கு புலப்படா. நிலத்தின் உஷ்ணநிலைமை காலங்களுக்குத் தக்கபடி மாறும். மேலும் இராப்பகலுக்குத் தக்கபடியும் மாறுகிறது. நிலப்பரப்புக்கு 3-அடிக்குக் கீழே (இரண்டாவதான) உஷ்ண வுணர்ச்சி கிடையாது. நிலத்தின் தன்மைக்குத் தக்கபடி உஷ்ண உணர்ச்சி அதிகரிக்கும் அல்லது குறையும். கரிவடிமண் (Black Soil) உஷ்ணத்தை நன்றாய்க் கிரகித்துக் கொள்ளுமாகையால் அவ்வகை நிலத்தில் வெகு சீக்கிரமாக சூடேறும் சாம்பல் நிறமுள்ள நிலம் சூட்டை இழுத்துக்கொள்ளாததாகையால் மேற்கூறிய நிலத்தைவிட மிகவும் தாழ்ந்த சூடாகவேயிருக்கும். நிலத்தின் மண் பருமனாகவிருந்தால் உஷ்ணத்தை அதிகமாக எருவு அடக்கிக்கொள்ளும்.

**நீரின் செயல்.**—நிலம் நீரினால் சொதசொத என்று நனைந்து போகாதபடிக்கு நீரை வடித்துக்கொள்ள வேண்டும். நிலத்தில் நீரை வடிக்கும் விஷயமாய்ப் பேர்போனவராகிய 'பார்க்ஸ்' (Parkes) என்பவர் இவ்விஷயமாய் சில பரிசோதனைகள் செய்து பார்த்திருக்கிறார்.

## பூமியிலுள்ள உஷ்ணத்திற்குக் காரணம்.

1. நிலத்தின் இயற்கை உஷ்ணம்.
2. பதார்த்தச் சிதைவால் உண்டாகும் உஷ்ணம்.
3. சூரிய வெப்பம்.

நிலத்தின் பொருள்கள்.—எல்லாவித நிலங்களிலும், மணல், களிமண், சுண்ணம், தாபரப் பொருள் (Humus or vegetable matter) உலோகப் பொருள்கள் இவை எல்லாம் சேர்ந்திருக்கின்றன.

1. மணல்.—வெகு சீக்கிரத்தில் உலர்ந்துவிடும். ஈரத்தை உறிஞ்சிக்கொள்ளுஞ்சக்தி கிடையாது; வாயுக்களை அடக்கும் சக்தியும் இல்லை. இது, தானேற்ற உஷ்ணத்தை வெளியேற்றவிடாது.

நீரிலும் திராவகத்திலும் கரையமாட்டாது. செடியிலுள்ள பொருள்களில் கலந்திருந்தாலும் இது மர உணவுப்பொருளாகமாட்டாது. இது நிலக்கண்களைத் திறந்துவைப்பதோடு, நீரானது நிலத்திலிறங்கும்படி இடங்கொடுக்கும். இவ்வகை நிலத்தை உழுவது இலகு. மரஞ்செடிகளின் வேர் மூலங்கள் தாராளமாய் ஓடி நிலத்திலுள்ள மரஉணவைப் பெறுவதற்கு நன்றாய் இடங்கொடுக்கும். இது நிலத்தில் மிகுதியாயிருக்குமானால் அந்தநிலம் செழிப்பற்றதாயும் வறட்சியாயுமிருக்கும். ஆனால் சொற்பமாகச் சேர்ந்திருந்தால் அவ்வகைநிலம் மிகவும் சிறந்ததாகும்.

களிமண்.—இதில் அநேகவிதங்களுண்டு. சுத்தமானநல்ல களிமண்ணை நனைத்தால் சவண்டு கொடுக்கும், ஒருவிதமான நாற்றமுமுண்டு. வெய்யலில் உலர்ந்தால் கடினமாயிருக்கும். உடைந்தால் தூளாகச் சிதறும். கலப்பில்லாத களிமண் இயற்கையில் கிடையாது. அவ்விதமண் விவசாயத்துக்கு உபயோகப்படாது. இது பொதுவாய் (potash) மரச்சாம்பற் பொருளோடும், சோடா உப்போடும் (soda) சுண்ணத்தோடும், (phosphoric acid) பாஸ்கராமிலத் திராவகத்தோடும் (magnesia) மாக்னிசியாக் களிம்போடும், கரியமல வாயுவோடும் சேர்ந்திருக்கும். களிமண் மேற்கூறிய பொருள்களோடு கலந்திருப்பதற்கேற்றபடி மிகவும் சிறந்ததாகும். இது ஈரத்தைச் சீக்கிரம் வெளியேறவிடாது. இதனிடையில் செடிக்கு உணவுப்பொருளிருக்கிறது. போதுமான அளவில் மணல் அல்லது சுண்ணத்தோடு கலந்திருந்தால் அவ்விதநிலம் செழிப்புள்ளதாயிருக்கும். மணற்பாங்கான நிலத்தை இலகுவாய் உழுதுவிடலாம். ஆனால் களிநிலத்தை உழுவது வெகு கஷ்டமாயிருக்கும்.

சுண்ணாம்பு பூமி.—இயற்கையில் பளிங்கு, சீமைச்சுண்ணம்பு, சுண்ணக்கல், பூச்சி, ஓடு இவைகளில் இது கலந்திருக்கிறது இது வெண்மையாயிருக்கும்; இதுவும் நீரை ஏற்று ஒருவாறு காத்துக்கொள்ளக்கூடியதுதான்.

நிலத்தின் செழிப்புக்கு முக்கியமாய், இது இருக்கவேண்டுவது. இது நல்லசெடி உணவுப்பொருளும், சிறந்த உரமுமாகும்.

சுண்ணச்சத்து (Colcium Oxide).—இது தாவரப்பொருளைத்தாக்கி அதைச் சீக்கிரம் மட்கும்படிசெய்து, கரியமலவாயு, நவச்சாரகச்சத்து, நீராகப்பிரித்துவிடும். இது செடிகளுக்குக் கெடுதியான தாவரத் திராவகங்களோடு சேர்ந்து அவற்றின் தன்மையை யழிக்கும். இது உலோகப்பொருள்களையும் தாக்கக்கூடியது. நீற்றப்படாத சுண்ணம் அவ்வளவு சக்தியுடையதல்ல. சுண்ணம் களிமண்ணிலத்தோடு சேர்ந்தால் நல்லது; இதுதானே செடிக்கு உணவை ஊட்டுவதல்லாமலும் நிலத்திலுள்ள மற்றச்செடி உணவுப்பொருள்களையும் வெளியேற்றிப் பயிரை ஊட்டச்செய்யும். நீற்றாத சுண்ணத்தைத்தான் இரசல்மண் (Light soil) நிலங்களுக்கு இடவேண்டும். இல்லையானால் நிலத்திலுள்ள இந்திரியப்பொருளைத் தின்றுவிடும். இதை மற்ற உரங்களோடு சேர்த்து இட்டால்தான் நிலத்தைச் செழிக்கச்செய்யுமேயொழிய தனியேபோட்டால் நிலத்தைக் கெடுத்துவிடும். களிமண்ணைப்போல இதுவும் பலபொருள்களோடு கலந்திருக்கிறது.

தாவரப்பொருள்.—இரண்டுவகை—பீட், (Peat) ஹியுமஸ் (Humus). நிலத்தில் அழுகும் தாவரப்பொருளைத்தான் ஹியுமஸ் (Humus) என்று சொல்லுகிறது.

பீட்.—Peat. உழுது பயிரிடும் நிலங்களில் தாவரப்பொருள்கள் எவ்வாறு திரள்கிறது. இது சற்று கறுப்பாயிருக்கும். இது விசேஷமாகவுள்ள நிலமும் அந்த நிறத்தைப்பெறும்; இது எப்போதும் மட்கிக்கொண்டே யிருக்கும். ஆகையால் நிலத்தில் கரியமலவாயு அதிகரிக்கும். மேலும் நிலத்தில் பெய்யும் மழை ஜலத்தில் கரியமலவாயுவை மிகுதியாய்க் கலக்கச்செய்யு மாகையால் பயிர்களுக்கு

உணவைக் கொடுக்கிறது. இது தன்னிடத்திலுள்ள தர்க்கியஸ்தை நாளடைவில் வெளியேற்றுகிறது. இது நிலத்தின் தன்மையை மிருதியும் செழிப்புறச் செய்கிறது. ஜலத்தை யடக்கிவைத்துக்கொண்டு நிலத்துக்கு வேண்டும்போது உதவுகிறது.

பழைய இரசாயனசாஸ்திரிகள் நிலத்தின் செழிப்புக்குக் காரணம் அதிலுள்ள "இந்திரியப் பொருளாற்றான்" என்ற கோட்பாட்டைக் கொண்டிருந்தார்கள். அவர்கள் அவ்விதமுடிவுக்கு வந்ததற்குக் காரணம் தோட்டநிலங்களிலும், மற்ற செழிப்பான பசளைமண் (Loamy) நிலங்களிலும் இந்திரியப்பொருள் மிகுந்திருப்பதனாற்றான். பாரன் லீபிக் (Baron Leibig) என்பவர் இந்தக் கோட்பாட்டை நிராகரித்தார். அவர் ஹியுபஸ் (Humus) நிலத்தின் செழிப்புக்குக் காரணமில்லையென்றும் நிலத்தின் செழிப்பின் பலனாகவே ஹியுமஸ் (Humus) ஏன்னும் பொருள் உண்டாகிறதென்றும் கூறினார். பயிர்கள் ஆகாயத்தினின்று கரிச்சத்தை (carbon) வாங்கிக்கொள்வதால் நிலத்தில் அப்பொருள் மிகுதியாகிறது. ஹியுமஸ்என்பது கரிச்சத்தும், ஜலவாயுவும், பிராணவாயுவும் தர்க்கியசமும் கூடியது. இவைகளெல்லாம் ஆகாயத்தினின்றும் கிடைக்கிறது என்றாலும் ஹியுமஸ் மிகவும் உபயோகமானது; ஏனென்றால் அது சோராவிடில் நிலமானது தூளாயும் பொரு பொருப்பாயு மிருக்கும்.

உலோகப் பொருள்கள். (Mineral fragments).—உழுது பயிரிடுவதற்கு ஒருவாறு தடையாயிருந்தாலும், இவை நிலத்துக்குமிகவும் உபயோககரமான பொருள்களாகும். ஏனெனில் நிலத்தின் தன்மையைத் திருத்தி பயிரிடுவதற்கு இலகுவாக்கிவிடும். இவைகள் பாறைகளினின்று நாளாவிருத்தியில் பெயர்ந்து கரைபவை. நன்றாய்க் கரைந்து நிலத்தோடு ஒன்றின்பின் ஒன்றாய் பயிருக்குவேண்டிய உணவைத் தரவல்லது.

செழிப்பும், செழிப்பின்மையும். (Fertility and Carrenness).—வேலைச்சிரமம்; பணச்சிலவு—இவைகளின் மிகுதியில்லாமலே ஏராளமான சிறந்த விளைச்சலைக் கொடுப்பதே 'செழிப்பு நிலமாகும்.' மிகுந்த சிரமம்; கவலை, பணச்செலவு முதலியவை செலவழித்தும் தக்க பலனைக் கொடுக்கக்கூடாத நிலத்தை 'தரிசு' அல்லது 'பாழ்' நிலம் என்பார்கள். மிகுந்த செழிப்புள்ள நிலமானது நீரை இலகுவாய் ஏற்றுக்கொள்ளவும் மிஞ்சியநீரை வடித்துக்கொள்ளவும் வெயில் மிகுதியால் சீக்கிரம் வறண்டுபோகாமலும் இருக்கவேண்டும்.

செடியின் வேர்கள் ஆழவும் அகன்றும் சென்று போஷிப்பைக் கிரகித்துக்கொள்ளத் தாராளமாய் இடங்கொடுக்கவேண்டும். தகுந்த சீதோஷ்ண நிலைமையிலுமிருக்கவேண்டும். கீழ்நிலமும் ஏற்றவாறு அமைந்திருக்கவேண்டும். பயிரைக் கெடுத்துவிடக்கூடிய பொருள்க (Ferrois iron, Salt, Alkali, Stagnant wa!er) ளிருக்கக்கூடாது. நிலத்திலுள்ள பயிருணவுப் பொருள்களையும் அவற்றினளவையும் இரசாயன சாஸ்திரத்தாலும், மற்றக் குணங்களை சடசாஸ்திர உதவியினாலும் அறிந்துகொள்ளலாம்.

பொருள் பாகுபாட்டால். (Physical Analysis)—கல், மணல், களிமண், இந்திரியப்பொருள், சுண்ணம் முதலியவற்றின் அளவு ஒற்றுமைகளைத்தெரியக்கூடும். நிலத்தின் தன்மையையும் (Texture) அறியலாம். (Chemical analysis) இரசாயன பாகுபாட்டால் நிலத்தில் சேர்ந்திருக்கும் முக்கியமான பயிருணவுப் பொருள்களையும் அவற்றின் அளவையும் காண்கிறோம். செடிகள் தங்களுக்குவேண்டிய 'உலோகஉணவை' (Mineral constituents) நிலத்தினின்றே பெறுகிறது. அவற்றில் சில முக்கியமானவை. சில முக்கியமில்லாதவை. உலோகப்பொருள்கள் கரைந்த நிலைமையிலிருந்தால்தான் பயிர்கள் கிரகிக்கக்கூடும். தற்கால இரசாயன சாஸ்திரத்தின் உதவிபற்றிய டையர்ஸ் என்பவரின் 'Dyer's method' முறையினால் நிலத்தினின்றும் கிடைக்கக்கூடிய பயிர் உணவையும் அதன் அளவையும் ஒருவாறு அறிகிறோம்.

நிலத்தின் செழிப்புகுன்றுதல். (Exhaustion.)—பயிர் விளைந்தபின் அறுத்துவிடுவதனால் நிலத்தின் 'பயிர் போஷணைப்பொருள்கள்' குன்றிவிடும். ஆகையால் நிலம் பின்பு செழிப்பைத் தராது. அதைத்தான் 'பாழ்நிலம்' என்பது. இரண்டொரு வருஷம் தரிசாய்ப் போட்டுவிட்டால் பழையபடி செழிப்பைப்பெறும். அப்படிக் கிடப்பதனால் வெயில், மழை, காற்று முதலியவை தரிசாய்க்கிடக்கும் நிலத்தில் தாக்குகின்றன. நிலத்தில் யதேச்சையாய் வளரும் புற்பூண்டுகளின் வேர்களும் கிழிக்கின்றன. அப்படிச் செய்வதால் க்வார்டஸ், பாஸ்போரைட்

ஜிப்சம், சுண்ணக்கல் (quarte, phosphorite gypsum, Limestone) மற்றும் பயிருக்குவேண்டிய உணவுப்பொருளைக் கொடுக்கக்கூடிய உலோகப் பொருள்கள் கரைந்து பயிரை ஊட்டும். ஆகையால் 'பயிர் போஷணைப்பொருள்' திரண்டுநிலத்தைத் திரும்பவும் செழிப்பாக்கிவிடும். இம்முறையைத்தான் தரிசுபோட்டு பழைய செழிப்புக்குக் கொண்டுவருவதென்பது. (Follow)

பூமிகளைப்பு (Exhaustion).—இருவகைப்படும் அதாவது(1)பொதுக்களைப்பு. (2) விசேஷக்களைப்பு.

1. ஒருவாறு முற்றிலுமே செழிப்புக் குன்றிவிடுதல் பொதுக்களைப்பு.

2. யாதானும் ஒன்று அல்லது சில செழிப் பொருளின்மையால் செழிப்புக்குன்றல் விசேஷக்களைப்பு. நிலத்தின் முதற்குறைவுக்கு புல உணவுப்பொருளையும் நிலத்துக்குத் தரக்கூடிய பொதுவாயுரத்தையும் 2-வது குறைவுக்கு அவ்வப்போது வேண்டிய தனிஉரத்தையும் போடவேண்டும்.

உரம் அல்லது எரு.—உரமானது இருவகைப்படும். (1) இந்திரிய உரம்(2) அநிந்திரிய உரம்.இந்திரியவுரத்தில் விசேஷமாய் தர்க்கியசமுள்ளது. அநிந்திரிய உரத்தில் பாஸ்கராமிலம், சுண்ணம், மரச்சாம்பல் (Phosphorus, Lime, potash) சேர்ந்திருக்கும்.

நிலத்தின் செழிப்பின்மைக்கு காரணம்.—பயிருணவுப் பொருளில்லாமையாலுமிருக்கலாம். அல்லது நிலத்துக்குக் கெடுதிசெய்கிற வஸ்துக்கள் கலந்திருந்து செழிப்பைத்தின்றும் விட்லாம்.—இன்னொரு காரணமுமிருக்கிறது. அது நிலத்தில் மிதமிஞ்சித் தங்கியிருக்கும் நீரை வடிக்காததால் உண்டாவது: இந்திரியப்பொருள் மிகுதியாயுள்ள கருநிலத்தில் (Peaty Soils) மக்குமண்ணிலமும் மற்ற நிலங்களும் (Organic acid or humic acid) இந்திரியத்திராவகப்பொருள் மிதமிஞ்சி யிருப்பதால் செழிப்பற்றதாய்ப் போய்விடுகின்றன.சுண்ணத்தை யிட்டாவது, நீரை வடித்தாவது தாக்கும்படி மண்ணை வெட்டிப்போட்டாவது இவை நீக்கவேண்டும். முக்கியமாய் நிலத்துக்கு கெடுதிவிளைவிக்கின்ற உப்புகளாவன:—சோடியம் சால்டஸ், சோடியம் கார்பொனேட் (Sodium salt's) (Sodium carbonate) மிகவும் கெடுதி விளைவிக்கின்றன.

**BY A SPECIALIST.**

# சுகாதாரவிளக்கம்

## HYGIENE

பண்டித நடேசசாஸ்திரியார் எழுதியது

### நித்திரை

129. நித்திரையால் நமக்குண்டாகும் சுகம்.—ஒவ்வொரு அவயவமும் தூக்கத்தில் அதிக பலத்தை அடைகின்றது. தூக்கத்தில் ஜீரணம் அதிக வேகமாக நடக்கின்றது. தூக்கத்தில் தேகத்திலிருந்து மேல்தோல் வழியாக வரும் வியர்வை ஒன்று நீங்கலாக மற்றவித நீர்வடிவுகள் குறைச்சலாய் நடக்கும். வியர்வைமட்டும் தூங்கும்பொழுது அதிகம். இதுதான்தேகத்துக்குச் சுகாவகம். தூக்கத்தால் கண்களுக்குண்டாகும் சுகத்தைச் சொல்லிமுடியாது.

130. தூங்கச் செல்லுங்காலம்.—இக்காலமானது நடுஇரவுக்கு 4-5-நாழிகைக்கு(ஒன்று அல்லது இரண்டுமணி) முந்தியதாகவே யிருக்கவேண்டும். நடுராத்திரிக்கு முந்தி ஒருநாழிகை தூங்கும் தூக்கம் நடுராத்திரிக்குப்பிந்தி இரண்டு நாழிகைத் தூக்கத்திற்குச் சமானமென்று சொல்லப்பட்டிருக்கின்றது. இரவில் நன்றாகத் தூங்கிவிட்டு விடியற்காலத்தில் எழுந்திருப்பது தேகத்துக்கு சௌக்கியத்தைக்கொடுக்கும், புத்தியைச் சீர்த்திருத்தும், நீடித்த வாழ்நாளையும்கொடுக்கும்.

131. தூக்கம் அவசியம்.—எல்லாப் பிராணிகளும் 60-நாழிகைக்கு ஒருதடவை அவசியம் தூங்கியேதீரவேண்டும். பகலும் இரவும் 60-நாழிகை ஒருவன் மனத்துணிவோடு விழித்திருக்கலாம். அதன் பிறகு அவனால் கண் விழிக்கமுடியாது. அவன் அவசியம் தூங்கியே தீரவேண்டும். வண்டி ஓட்டுகிறவன் வண்டியின் பாரில் உட்கார்ந்துகொண்டே தூங்கிவிடுகின்றான். போர்க்களத்தில் 60-நாழிகை சேர்ந்தால்போல் சண்டைபோடுகிறவர்கள் குதிரையின்மேல் சேணத்தில் உட்கார்ந்தபடியே தூங்கிவிடுகின்றார்கள். அலக்ஸாண்டர்-தி-கிரேட் (Alexander the Great) என்பவரும் நெபோலியன் என்பவரும்போர்க்களங்களில்போர்நடந்துகொண்டிருக்கும் பொழுதே நடுயுத்தத்தில் தங்களைச்சுற்றி நாலுவித ஆயுதங்கள் வந்து விழுந்துகொண்டு தங்கள் பிராணனை பிரதிநிமிஷம் அபாயத்திற் குள்ளாக்கும் பொழுதே அயர்ந்து தூங்கிவிட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

## XI அதிகாரம்

ஒவ்வொருவனும் தனது சுகத்தைப் பேணிக் கொள்ளும் முறை.

132. சுகத்தில் அதிகக் கவலை.—இம்முறைகள் பலவாகையால் நம்மால் கூடியமட்டும் சில பொது முறைகளைமட்டும் இவ்விடம் எடுத்துச்சொல்லுவோம். நாம் சுகப்படும் முறைகளை எப்பொழுதும் நன்றாக அறிந்திருக்கவேண்டும் என்றாலும் எப்பொழுதும் அவைகளிலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பது நமது சுகத்தை ஒருவாறு கெடுக்கும் தங்களுக்கே கொஞ்சம் வைத்தியம் தெரிந்திருந்தால் சிலர் காலையில் எழுந்தவுடன் நிமிஷத்துக்கு ஒருதடவை தங்கள் கையைப்பிடித்து நாதுபார்த்துக்கொண்டு பித்தம் அதிகமாயிற்று வாதமதிகமாயிற்று என்று கவலைப்பட்டுக்கொண்டே யிருப்பார்கள். சிலர் கண்ணாடியில் தங்கள்முகத்தைப் பார்த்துக்கொண்டும் கண்ணில் இரத்தமில்லை என்பார்கள். இவ்வண்ணம் ஒவ்வொருவனும் விசாரப்பட்டுக்கொண்டிருப்பானேயானால் அது அவன் சுகத்தைக் குறைக்கும்.

133. தனக்குத்தானே வைத்தியன்.—தன் தேகத்துக்கு ஏற்றுக்கொள்ளும் உணவு அவனவனுக்குத்தான் நன்றாகத்தெரியும். இது ஒவ்வொருவருடைய பழக்கத்தைப்பொறுத்தது. அவ்வாறு தனக்கேற்ற உணவைப் புசிப்பதாலும் அதை ஒருவாறு செரித்துக்கொள்ளத் தகுந்த வியாயாமம் குறைவின்றிச் செய்வதாலும், மிதத்துக்கு மீறிப்புசிக்காமலிருப்பதாலும், ஒவ்வொருவனும் தனது ஆகாரவிஷயமாய்த்தான் அடையவேண்டிய சுகத்தை அடைவான். பருத்ததேகமுடையவர்கள் கஞ்சி அதிகமாக நிற்கும் ஆகாரங்களை அகற்றி, கிழங்கு, சர்க்கரை, நெய் முதலிய கொழுப்புள்ள பதார்த்தங்களைவெகுவாய்ப்புசிக்காமலிருக்கவேண்டும். போஜனம்செய்யும்பொழுது அவஸரமாய்க் கவளத்தின்மேல் கவளம் புசிக்கக்கூடாது. பருத்ததேகமுள்ளவர்கள் அதிக உப்பும் காரமுமாகச் சாப்பிடுவதை நிறுத்தவேண்டும். இவைகள் அதிகமானால் நீருந்துவது அதிகமாகும்.

134. வியாயாமம்.—நாம் ஒவ்வொருவரும் செய்யவேண்டிய வியாயாமம் நமது சொந்த சௌக்கியத்தைச் சார்ந்தது. வியாயாமம் ஆண்களுக்கும் பெண்களுக்கும் அவசியம். நமது நாட்டுப்பெண்கள் நமது வீட்டுவேலைகளைச் செய்வதால் போதுமான வியாயாமலாபத்தை அடைகின்றார்கள்.

135. உடுப்பு.—நம் சருமத்தை உடுப்பு அழகாய் மூடுவதுடன் நம்தேகத்திலுண்டாகும் உஷ்ணத்தைப்பாதுகாத்து நம் ஆகாரத்தைஜீர்ணமும்செய்து கொடுக்கின்றபடியால் உடுப்பு விஷயத்தில் நாம் காலத்துக்கும் இடத்துக்கும் வயதுக்கும் தகுந்தபடி ஒவ்வொருவரும் வெகு ஜாக்கிரதையாக விருத்தல்வேண்டும்.

136. ஸ்நானம்.—ஸ்நானவிஷயத்தில் அவனவன் தேகத்துக்கும் பலத்துக்கும் தகுந்தபடி வெந்நீரிலோ அல்லது தண்ணீரிலோ, அதிகாலையிலோ அல்லது எப்பொழுதோ ஒவ்வொருவனும் நீராடி தன் சருமத்தை வெகு பரிசுத்தமாக வைத்துக்கொள்ளவேணும், .

137. மலக்கட்டு.—இவ்வுபத்திரவமில்லாதவண்ணம் நாம் எப்போதும் பாதுகாத்துக்கொள்ளவேண்டும். இந்நோயால் வருந்துகின்றவர்கள் அடிக்கடி வாரத்துக்கு ஒருமுறை அல்லது மாதத்திற்கு இருமுறை பேதிக்கு வாங்கிகொள்ளுவார்கள். அவ்வழுக்கம் மலக்கட்டை முற்றிலும் நீக்காமற் போவதுடன் தேகத்துக்கு துர்ப்பலத்தைஉண்டாக்கும். ஆகாரத்துடன் அதிக நீர் உட்கொள்ளுவதாலும் கீரை முதலிய இனங்கள் ஆகாரத்தில் சேர்த்துப் புசிப்பதாலும், கனிவர்க்கங்களை அதிகமாகக் கூட்டுவதாலும் நாம் நமது மலபந்த அவஸ்தையை ஒருவாறு நீக்கிக்கொள்ளலாம்.

138. ஆதிவியாதி.—தேகத்திலுண்டாகும் நோய்களுக்கு வியாதியென்று பெயர். மனத்திலுண்டாகும் சங்கடங்களுக்கும் துக்கங்களுக்கும் கவலைகளுக்கும் ஆதி என்று பெயர். ஆதிக்கும் வியாதிக்கும் ஒரு அரை எழுத்துதான் வித்தியாசம். நாம் நமது மனத்தை விசாரமன்றியில் வைத்துக்கொள்ளுவது நமது தேகசௌக்கியத்திற்கு முக்கிய காரணம். சிலர் எப்பொழுதும் ஏக்கப்பட்டுக்கொண்டும் கவலைப்பட்டுக்கொண்டுமிருந்து தங்கள் தேக சௌக்கியத்தைக் குறைத்துக்கொள்ளுகிறார்கள். நாம் சந்தோஷமாயிருந்தால்நமது ஜீரணசக்திக்கு ஒருவிதக்குறைவும் வராது.

139. தேசவளம் நீர்வளம் முதலியன.—இவைகளைப்பற்றி நாம் கொஞ்சம் எப்பொழுதும் தெரிந்துகொண்டிருப்பது அவசியம். ஏன்? நாம் ஓரிடத்தில் வசிக்கும்பொழுது அவ்விடத்திலிருக்கும் சீதோஷ்ணங்கள், வாயுவின் சலனம், தீர்த்தம், நீர்வளம் இவை

களெல்லாம் நமது தேகசௌக்கியத்துடன் சம்பந்தப்பட்டிருக்கின்றன. மனிததேகமோ எத்தேசத்திலும் சென்று அவ்விடத்திய சீதோஷ்ணம் நீர்வளம் முதலியவைகளுக்கு தக்கபடி வசிக்க இயற்கையுள்ளது.

140. தேசப்பிரகிருதி.—பூமியின் உயரம், உத்ஸர்பிணி அல்லது அவஸர்பிணியாயிருக்கும் தன்மை, நாமிருக்கும் நாட்டின் காற்றோட்டம், மேகம்தங்கும் நிலைமை, மழைபொழியுமியற்கை, சுற்றியிருக்கும் சமுத்திரம் அல்லது மலை முதலிய பாங்கு, கோடைகாலம் முதலிய வருஷத்தின் பாகம், இவைகளெல்லாவும் நாம் தெரிந்துகொள்ளவேண்டும். நாம் குடியிருக்கும் தேசப்படி நமது தேகசௌக்கியத்தை அத்தேச பிரகிருதிக்குத்தக்கபடி நாம் பாதுகாத்துக் கொள்ளவேண்டும்.

141. வெளிச்சம்.—வெளிச்சம் ஒவ்வொருவனுக்கும் வெகு முக்கியம். நாம் வாசஞ்செய்யும் எல்லாவிடங்களிலும் வெளிச்சம் ஏராளமாகவேண்டும். மனிதர்களாகிய நமது தேகவளர்ச்சிக்கு வெளிச்சம் அவசியம் என்பது ஸித்தாந்தம்.

142. ஜலதோஷம்.—நாம் கொஞ்சம் அசாக்கிரதையாயிருப்பதால் பெரும்நோய்களை சில சமயத்தில் வரவழைத்துக்கொள்ளுவோம். நாம் தூங்கும்பொழுது நமதுதேகம் நன்றாக வியர்க்கும். அப்பொழுது தெரியாததனத்தால் நாம் காற்று நம் மேலடிக்க இடங்கொடுத்தால் அதனால் ஜலதோஷமுண்டாகும். வெளியில் குளிர்ந்தகாற்று வீசும்போது உலாவும்படி வந்தால் வாயால் சுவாசிப்பதால் நாம் ஜலதோஷத்தை வரவழைத்துக்கொள்ளுவோம். நாம் வெகு வேகமாக வெளியில் நடந்துவிட்டு வியர்க்க வியர்க்க நமது வீட்டுக்குள் புகும்போதும் அல்லது நன்றாக வியாயாமம் செய்துவிட்டு தேகம் உஷ்ணமாய் வியர்த்துக்கொண்டிருக்கும்பொழுதும் நமது தேகத்தின்மேல் போட்டிருக்கும் துணிகளை அகற்றும்பொழுதும் காற்று மேலே படும்படிசெய்வதால் ஜலதோஷம் பிடிக்கும்படி செய்துகொள்ளுகிறோம். வெந்நீரில் ஸ்நாநம் செய்தவுடன் குளிர்காற்றில் நிற்பதால் ஜலதோஷம் வரவழைத்துக் கொள்ளுகிறோம். இவ்வித அஜாக்கிரதை நம்மிடமிருக்கக் கூடாது. ஒருவாறு நம்மையறியாமல் நாம் இவ்விதமாய் நோயில் வருந்தும்படிவந்தால் அதை உடனே நாம் நீக்கிக்கொள்ளவேண்டும்.

# குமார ஸம்பவம்

## BIRTH OF KUMARA

பண்டித நடேசசாஸ்திரியார் மொழிபெயர்ப்பு.

### IX அத்தியாயம்

52. அவள் தோழியும் அப் பிரமசாரிக்கு மறுமொழி சொல்லலானாள். ஐயா ஸாதுவே, இவ்வம்மணி எக்காரணத்தால் ஒரு தாமரைமலரை வெயிலுக்குக்குடையாகப் பிடிப்பதுபோல் தமது மேன்மையான தேகத்தை தவத்துக்கு ஸாதனமாக்கிக்கொண்டாள் என்பதைப்பற்றி உமக்குக் தெரிந்துகொள்ள அவாவிருந்தால் சொல்லுகிறேன்; கேளுங்கள் :—

53. வெகு செறுக்குள்ள இவ்வுத்தமி இந்திரன் முதலான எட்டுதிக்குப் பாலகர்களையும் வேண்டாம் என்று அவமதித்துவிட்டு மன்மதனையே எரித்த காரணத்தால் ஒருபொழுதும் அழகுக்கு அடங்காத பிநாகபாணியையே தனக்குக் கணவனாக அடைய விரும்புகின்றாள்.

54. மன்மதன் உயிருடனிருந்த காலத்திலேயும் புரம் மூன்றெரித்தோன் போட்ட ஹூங்காரத்தால் அவன்மேல் படாமல் திரும்பிவந்த மன்மதபாணமானது அம்மன்மதனிப்பொழுது இறந்து அழிந்தே போனபோதிலும் இப்பார்வதியின் உள்ளத்தில்மட்டும் நன்றாகத் தைத்திருக்கின்றது.

55. அதுமுதல் பார்வதி தனது தந்தைவீட்டில் தமது கூந்தல் நெற்றிச் சாந்தால் அழுக்கடைய மன்மதாவஸ்தைகொண்டு பனியே கல்லாய் உறைந்திருக்கும் பாறையில் உட்கார்ந்தும் சுகமடையாதவளாயிருந்தாள்.

56. சிவபெருமானுடைய சரித்திரம் ஓதப்படும்பொழுதெல்லாம், பார்வதி தனது கண்களில் நீர் ததும்ப வாய்குளற வனங்களில் தன்னுடன் கூடிப்பாடும் கின்னரமடந்தைகளையும் பலதடவைகளில் அழுதுகொண்டே பாடி நிற்கச்செய்தாள்.

57. அன்றியும் அவள் ஒவ்வொரு இரவும் மூன்று ஜாமம் முற்றிலும் விழித்திருந்து கடைசியாய்க் கொஞ்சம் மெய்யயர்ந்து கண்மூடி உடனே விழித்துக் கொண்டு, ஏ நீலகண்ட, நீங்கள் எங்கு போகின்றீர்

* இவ்வாறு குளிர்ந்தவிடங்களில் உட்கார்ந்தால் இவ்வித அவஸ்தை நீங்கும் என்பது கொள்கை. பார்வதிக்குமட்டும் நீங்கவேயில்லை என்பது கவியின் கருத்து.

என்று கூவி ஒருருவும் அருகிலில்லாமலிருக்கையிலேயே ஏதோ ஒருவர் கழுத்தில்தான் கையைப்போட்டு அணைத்துக்கொள்ளுவதாகக் கட்டிக்கொள்வாள்.

58. எல்லாப் பெரியோர்களும் எங்கும் நிறைந்தவர்என்று உம்மைச் சொல்லுகின்றார்களே, அப்படியிருக்க உள்ளத்தை முற்றிலும் நான் உம்மிடத்தில் செலுத்தியிருக்கின்றதுமட்டும் உமக்கு ஏன் தெரியவில்லை என்று இம்மடந்தை தனது உள்ளங்கையில் சிவபெருமான் உருவத்தை எழுதி அவரை மனதுக்குள்ளேயே நிந்திப்பாள்.

59. இப்பார்வதி இவ்வாறு தான் என்னதான் முயன்றும் சிவனை அடையமுடியாமல் தவத்தையன்றி வேறுவழி காணாதவளாய், தந்தையின் அனுமதிபெற்று எங்களுடன் தவம்புரிய இவ்வாச்சிரமம் வந்தாள்.

60. இங்கு இவள் செய்த தவத்துக்கு சாட்சிகளாய் விளங்கும் இவள்வைத்த மரங்கள் பழங்களோடு நிரம்பியவைகளாய்க் காணப்பட்டுங்கூட பிறைசூடியின் விஷயமாய் இவள் கொண்டிருக்கும் மனோரதம்மட்டும் இன்னும் முளைவிட்டதாகக்கூடக் காணப்படவில்லை.

61. எத்தனைதான் பிரார்த்தித்தும் இதுவரையிற் கிட்டாத அச்சிவபெருமான், தவத்தால் மெய்மெலிந்தவளும் தோழிகளாகிய எங்களால் எப்பொழுதும் கண்ணுங்கண்ணீருமாய்ப் பார்க்கப்பெறுபவளுமான பார்வதியிடம் எப்பொழுது மனமிரங்கி நன்றாக உழப்பட்டு மழையின்மையில் பரிதாபமான நிலைமையில் இருக்கும் நிலத்தின் மேல் இந்திரன் மனமிரங்குவதுபோல், அவள் மனத்தைக் குளிரப்பண்ணுவானோ அதுதான் எங்களுக்குத் தெரியவில்லை.

62. பார்வதியின் கருத்தை நன்றாக அறிந்த அத்தோழி ஒன்றையும் ஒளிக்காமல் உள்ளதை உள்ளபடி அச்சிறுவனிடம் சொல்லவே, அவன் அதைக் கேட்டு தான் சந்தோஷப்பட்டதாக ஏதும் காட்டிக்கொள்ளாமல் பார்வதியைப்பார்த்து "அம்மணி, இது உண்மைதானா, அல்லது பரிகாஸமா" என்று கேட்கலானான்.

63. அப்பொழுது பார்வதி தாமரை மொகிழ்போல் விரல்கள் மூடியிருந்த தனது வலக்கை நுனியில் தனது ஜபமாலையைப் பற்றியவளாய் தான் வெகு நேரமாக இன்னதான் பேசவேண்டும் என்று நிர்ணயித்துக்கொண்டிருந்த சொற்களை வெகு சிரமத்துடன் சுருங்கிய சொற்களால் பின்வருமாறு சொல்லலானாள்.

64. வேதங்களை அறிந்தவர்களில் உத்தமரே, இதுவரை எனது தோழி சொன்னதைக் கேட்டபடி நான் ஏதோ பெரும்பதவியை அடையவிரும்பினவளாகவே இருக்கின்றேன். அப் பெரும்பதவியை அடைய இந்தத்தவம் எப்படிபோதும்? ஆனால் அப்படி எண்ணிவிட்டுவிடவும் மனம்வரவில்லை. ஆசைக்கு அளவில்லையன்றோ!

65. அதைக் கேட்டதும் அப்பிரமசாரி மறுபடி பேசலானான். எனக்கு மகேசுரனை நன்றாகத்தெரியும்! நீங்களோ அவனிடம் கருத்துக் கொண்டவராயிருக்கின்றீர்கள்! அசுபமான காரியங்களைச்செய்வதிலேயே அவனுக்கு எப்பொழுதும் அதிக ஆசையாகையால் நீங்கள் அவன்மேல்கொண்டிருக்கும் ஆசைக்கு இடங்கொடுக்க எனக்கு மனமில்லை.

66. அற்பவஸ்துவில் வீண் அபிமானம் வைத்தவரே! முதல் முதல் கலியாணச்சரடு கட்டிய உமதுகையால் நாகப்பாம்பை வளையலாக அணிந்திருக்கும் சிவன்கையைநீங்கள் எவ்வாறு பற்றுவீர்கள்?

67. நீங்களே உங்களுக்குத் தெரிந்தமட்டில் யோசித்துப்பாருங்கள், அழகான அன்னபட்சிகளின் உருவிழைக்கப்பெற்ற உங்களுடைய கலியாணப்பட்டும் இரத்தத்துளிகள் சொட்டும் ஆனைத்தோலும் ஒன்றுடன் மற்றொன்று முடிபோடச்சரிப்படுமோ?

68. கிட்டாணிகளில் மலர்கள் பரப்பி உலாவிக்கொண்டு செங்குழம்புச்சாயம் பூசிய உங்கள் பாதங்கள் எங்கும் தலைமயிர் சிதறிக்கிடக்கும் சுடுகாட்டில் அலையும்படி நேரிடுவதை உமது மாற்றான் கூட சகிக்கமாட்டானே.

69. முக்கண்ணன் மார்பில் நீங்கள் அணையும்படி நேரிட்டால் அதைவிட ஒவ்வாமை வேறு முண்டோ! அரிசந்தன நற்சாந்தணிந்த உங்கள் மார்பில் சுடுகாட்டுச் சாம்பலன்றோ படியும்?

70. இன்னும் ஒரு முதன்மையான அவமானத்தைச் சொல்லுகின்றேன் கேளுங்கள். உங்கள் கலியாணமானவுடன் யானையின் மேலேறி ராஜகுமாரிக்குத் தக்கபடி நீங்கள் நகர்வலம் வரவேண்டியதாகவிருக்க நீங்கள் கிழ எருதின்மேல் ஏறியல்லவோ உட்காரவேண்டியதாயிருக்கும். அப்பொழுது நகரத்து ஜனங்கள் எல்லாரும் சிரித்த முகத்துடன் பரிகாசம் பண்ணியல்லவோ உங்களைப் பார்ப்பார்கள்?

71. ஈசனுடன் சேரவேண்டும் என்ற ஆசையுடனிருக்கும் இருவர்களைப்பற்றித்தான் நானிப்பொழுது விசாரப்பட வேண்டியிருக்கின்றது. அவர்கள் யாரெனில் ஏற்கெனவே ஈசனுடன் சேர்ந்துவிட்ட வெகு காந்தி படைத்த சந்திரனுடைய கலை ஒன்று. மற்றது இவ்வுலகத்தின் கண்களுக்கு சந்திரகாந்தி போல் விளங்கும் நீங்கள்.

72. சுடலையாடியின் முகத்தின் அழகோ முக்கண்கள்கொண்ட அழகு! அவன் பிறப்போ தெரியாதபிறப்பு. அவனுடைய ஐசுவரியமோ திகம்பரன் (ஆடை அற்றோன்) என்ற அவன்பெயராலேயே வெளிப்படுகின்றது. இளம் மானின் கண்களுடையாய்! உலகத்தார் தங்கள்மாப்பிள்ளைகளிடம் நாடிப் பார்க்கும் இலட்சணங்களில் ஏதாவது சிறிது முக்கண்ணனிடம் இருக்கின்றதா நீங்களே யோசித்துப் பாருங்கள்.

73. ஆகையால் இவ்விரும்பத்தகாத தன்மைபெற்ற இக்காரியத்திலிருந்து உங்கள் மனத்தை அகற்றுங்கள். அவ்வாறிருக்கும் அவனெங்கே, எல்லாவித உயர்ந்த பாக்கியங்கள் பெற்று இவ்வாறிருக்கும் நீங்கள் எங்கே. மயானத்தில் நட்டிருக்கும் கழுமரத்துக்குப்போய் வேதியர்கள் யாகஸ்தம்பத்திற்குச்செய்யும் பூஜைகளெல்லாம் செய்வதைப் பெரியோர்கள் ஒப்புவார்களா?

74. இவ்வாறு அவ்வந்தணன் தனக்கு விரோதமாகப் பேசவே பார்வதி துடிக்கும் தனது உதட்டில் தனது கோபத்தை வெளிக்காட்டுகின்றவளாய் ஓரங்களில் சிவந்து புருவங்கள் நெருக்கப்பெற்ற தனது கண்களைச் சுழற்றிஅவனை ஒரு பார்வை பார்த்தாள்.

75. அன்றியும் பின்வருமாறு அவனைப்பார்த்துச் சொல்லலானாள் :—சிவபெருமானை நீ உண்மையாக அறிந்துகொள்ளாதபடியால் நீ இவ்வாறு பேசினாய். எளிதில் உலகத்தாரால் ஆராய்ந்தறிய முடியாதவரும் மனத்தால் எட்டமுடியாதவருமான பெரியோர்களைமூடர்கள் எப்பொழுதும் நிந்திப்பது வழக்கம்.

76. தனக்குவரும் ஆபத்துகளை விலக்கவேண்டியவனும் அல்லது ஐசுவரியங்களை அடையவேண்டியவனுமே சுபமானகாரியத்தையே செய்துகொண்டிருப்பான். இவ்வுலகங்களுக்கெல்லாம் அடைக்கலமா யிருந்துகொண்டு ஓர்வித ஆசையும் பற்றுமில்லாத ஈசனுக்கு ஆசையை மனத்தில் விளைவிக்கும் இவ்விதச் சுபங்கள் எதுக்கு?

# நீலி வசீகரம்

## TAMING OF THE SHREW

---

(வனிதேசுவரியும் விஜயராகவ உடையாரும் முன் வருதல்.)

சுப் —அம்மணி! நீங்கள் இருவரும் நன்றாக வாழுங்கள்; நானும் பிரதாபருத்திரதேவரும் உன்னை நிராகரித்துவிட்டோம்.

வநி.—நிஜமாகவா? என்னுடன் பரிகாசம் செய்யாதேயும்.

சுப்.—நிஜந்தான்; துணியைப்போட்டு வேண்டுமானாலும் தாண்டட்டுமா?

விஜ.—அப்படியானால் கோவிந்தவாத்தி ஒழிந்தான்.

சுப்.—அவர், அத்தைமகளைக் கட்டிக்கொள்வதாகப் போய்விட்டார்.

வநி.—எப்படியாவது சுகமாக வாழட்டும். ஆனால் அவன் என் அக்காளைப்போன்ற குணமுள்ளவளாயிற்றே!

சுப்.—கல்யாணம் பண்ணிக்கொண்டு ஸ்திரீகளை வசீகரம் செய்யும் பள்ளிக்கூடத்துக்குப் போகப்போகிறாராம்.

வநி—பள்ளிக்கூடமா? அப்படி யொன்றிருக்கிறதா? எங்கே இருக்கிறது.

சுப்.—ஆமாம், இருக்கிறது; அதில் உபாத்தியாயராக நாராயணத்தேவர் இருக்கிறார்; அவரிடம் படித்தால், நீலியையும் வாயாடியையும் வசப்படுத்துவதற்குக் கற்றுக்கொள்ளலாம்.

(கேசவன் வருதல்)

கே.—இந்நேரம் பார்த்துப்பார்த்து என் கண்ணெல்லாம் பூத்துப்போய்விட்டது; கடைசியாக ஒருவன் வந்தான்; அவன் நம்முடைய காரியத்துக்குப் பொருத்தமுள்ளவனாக விருப்பான்.

சுப்.—அவன் யாவனென்று தெரியுமா?

கே.—ஐயா! பரதேசியோ, என்னவோ தெரியவில்லை. நடை முதலியவற்றைப் பார்த்தால் பெரிய எஜமானரைப்போலவே இருக்கிறான்.

விஜ.—சுப்பராயா! அவன் எதற்காக?

சுப்.—அவன் யோக்கியனாக விருந்தால் அவனை நல்ல நாயக உடையாராக்கி, ரகுநாத தேவரிடம்

கொண்டுபோய்விட்டு, காரியத்தை முடித்துவிடுகிறேன். நீங்கள் உள்ளே போங்கள்; நான் காரியத்தைப் பார்த்துக்கொள்ளுகிறேன்.

(விஜயராகவ உடையாரும் வசிதேசுவரியும் போதல்)

(தீர்த்தயாத்திரை வருதல்)

தீர்.—யாரப்பா, அங்கே? நீர் இந்தவூர்தானா?

சுப்.—ஆமாம், ஐயா தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கே போவதிப்போது?

தீர்.—நான் ராமேசுவரத்திலிருந்து வருகிறேன்; வடக்கே காசி, பிரயாகை, கயை முதலிய க்ஷேத்திரங்களுக்குப் போகவேண்டுமென்று உத்தேசிக்கிறேன். ஈசுவரன்செயல் எப்படியோ யாருக்குத் தெரியும்?

சுப்.—தாங்கள் ஜன்மபூமி எதுவோ?

தீர்.—நான் நிரந்தரமாக இருப்பது ராஜமன்னார் கோயில். ஏறக்குறைய முப்பதுவருஷமாக இப்படி தேசசஞ்சாரம்தான் செய்கிறேன். கங்கா ஸ்நாநம் மூன்றுதடவை செய்திருக்கிறேன்; இப்போது பஞ்சகாலமாக விருப்பதால் அங்கே போகவேண்டாமென்று எல்லோரும் சொல்லுகிறார்கள். ஆனால் இங்கே இருந்தால் க்ஷுபாதை தீருவது எப்படி?

சுப்.—உங்களைப் பார்த்தால் சாக்ஷாத் ஈசுவரனைப் போல விருக்கிறது, உங்களைப்போன்ற புண்ணியவான்களைத் தரிசித்தால் பண்ணிய பாவங்களெல்லாம் நசித்துவிடும்; எல்லாவித ஒத்தாசையும் நான் செய்கிறேன்; நீங்கள் விசாரப்படவேண்டாம்.

தீர்.—உனக்கு க்ஷேமமுண்டாகும்; உன்னை எப்போதும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருப்பேன்.

சுப்.—தாங்கள் எப்போதாவது தஞ்சைக்குப்போனதுண்டோ?

தீர்.—என்ன அப்படிக் கேட்கிறாய்? தஞ்சைக்கு அடிக்கடி போயிருக்கிறேன். பிரகதீசுவரனைத் தரிசிக்கிறதற்கு குறைந்தது ஐம்பதுதரமாயினும் போயிருப்பேன்.

சுப்.—அவ்விடத்தில் நல்லநாயக உடையாரைத் தெரியுமோ?

தீர்.—பரிச்சயமில்லை; ஆனால் அவரது குணநிசயங்களைப்பற்றி விசேஷமாய்ச்சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் பெருத்த தனிகராமல்லவா?

சுப்.—அவர் என்னுடைய தகப்பனார்; அவரைப் பார்த்தால் உங்களைப்பார்க்கவேண்டாம்; இரண்டு பேரும் ஒரே அச்சாக விருக்கிறீர்கள்.

தீர்.—அப்படியா? அடடா! வெகு பாக்கியம்! நீர் இங்கு என்ன செய்கிறீர்? ஏதாவது அரண்மனையில் * எட்டிப்பட்டம் பெற்றிருக்கிறீரோ?

சுப்.—நான் இங்கே ஒரு காரியமாக வந்திருக்கிறேன்; அதில் நீர் கொஞ்சம் உதவிசெய்தால், உமக்கு ஏராளமான பணம் கொடுக்கிறேன். நீரும் எனது தந்தையான தஞ்சை நல்லநாயக உடையாரும் ஒரே சாயலினரென்று சொன்னேனல்லவா? நீர் இப்போது அவர்தானென்று சொல்லிக்கொண்டு நடக்கவேண்டும்; என் வீட்டில் இருந்து சவுக்கியமாய்க் காலங்கழிக்கலாம். தெரிந்ததா? இதற்குச் சம்மதமா, உமக்கு?

தீர்.—(தனக்குள்) இன்றைக்கு நரிமுகத்தில்தான் விழித்தேன்போலும்! எனது தரித்திரம் அதமாய்ப்போய்விட்டது, இன்றோடே.—(வெளிப்படையாய்) உம்மைப் பார்த்தால் வெகு நல்லவர் என்று தோன்றுகிறது. என்னால் கூடுமானவரையில் உதவிசெய்கிறேன்.

சுப்.—அப்படியானால் என்னுடன் வாரும்; என்னுடைய தகப்பனார் இன்றைக்காவது நாளைக்காவது வருவார்; எனக்கும் இவ்வூர் ரகுநாததேவரின் பெண்ணுக்கும் நடக்கப்போகிற கல்யாண விஷயத்தைப்பற்றிப் பேசுவதற்காகவே அவர் வருகிறார்; அவ்விஷயங்களிலெல்லாம் நீர் நடந்துகொள்ளவேண்டியதற்கு நான் அடிக்கடி சொல்லிக்கொடுக்கிறேன். இப்போது எனது ஜாகைக்கு வாரும். முதலில் நீர் நல்ல உடை உடுத்துக்கொள்ளவேண்டும்.

(போதல்)

களம் 3 உறையூர் நாராயணத்தேவர் வீடு.

(கௌதமிதேவியும் பொன்னனும் வருதல்.)

பொ.—நான் மாட்டவே மாட்டேன்; என் பிழைப்புப்போய்விடும், அம்மணி, தெரிந்தானால் எஜமானர் என்னைக் கொன்றுவிடுவார்.

* எட்டிப்பட்டம் என்பது முற்காலத்தில் தமிழ்நாட்டில் வணிகர்க்கு அரசரால் கொடுக்கப்படும் பட்டம் ஒன்று. அதன் அடையாளம் ஓர் பொற்பூ.

கௌ.—வரவர அவர்கோபம் அதிகரிக்கிறதே யொழியக் குறைந்தபாடில்லை. என்னைப் பட்டினி போட்டுக்கொல்வதற்காகவா கல்யாணம் செய்துகொண்டார்? என் தகப்பனார் வீட்டுவாசலில் வரும் பிச்சைக்காரனுக்குக்கூட வயிறுநிறைய சோறுபோட்டுப் போகச்சொல்லுவார்களே! எனக்குப் பசி காதடைக்கின்றது; இரண்டு இராத்திரியாகத் தூங்கவேயில்லை; உடம்பு தளர்ந்துபோகின்றது; இப்படிக் கொல்லுகையில், எல்லாம் என்மேல் பிரியத்தினால்தான் செய்வதாகச் சொல்லுகிறார். செத்தாலும் நன்றுதான்போலும்.—உன்னைக்கெஞ்சிக்கேட்கிறேன். உளளேபோய்க்கொஞ்சம் சோறுகொண்டுவா; எதுவாக இருந்தாலும் பாதகமில்லை.

போ.—கொஞ்சம் பொங்கல் கொண்டுவரட்டுமா?

கௌ.—கொண்டுவா; அதில் எனக்கு அதிகப்பிரீதி.

போ.—பொங்கல் அஜீர்ணத்தைக் கொண்டுவந்துவிடும்; அது வேண்டாம்; கொஞ்சம் புளியஞ்சாதம் கொண்டுவருகிறேனே?

கௌ.—நீ நல்லவன்; கொண்டுவா, கொண்டுவா; அதைத்தான் நான் பிரியமாய்ச் சாப்பிடுவது வழக்கம்.

போ.—அது மந்தத்தைக் கொடுக்குமே; அது வேண்டாம்; தயிர்ச்சாதம் கொண்டுவருகிறேன்.

கௌ.—அதுவும் எனக்குப் பிரியந்தான். அதையேனும் கொண்டுவா.

போ.—அதில் காரமிருக்காதே? காரமுள்ளதல்லவா உங்களுக்கு வேண்டும்?

கௌ.—ஏதாவது கொண்டுவா; என்னை கேட்க வேண்டாம்; சீக்கிரம் கொண்டுவா.

போ.—வெறும்சாதம் கொண்டுவரட்டுமா?

கௌ.—அட, நீ நாசமாய்ப்போக! சோறு சோறு என்று வாயால் சொல்லிக்கொண்டே ஏமாற்றுகிறாயா? நீ தொலைந்துபோ. (அவனை யடித்தல்.) நான் இப்படிப் பட்டினிகிடந்து சாகிறது உங்கள் எல்லோருக்கும் சந்தோஷமா? நீ இங்கே இருக்காதே தொலைந்துபோ.

(நாராயணத்தேவர் ஒருதட்டில் ஆகாரத்துடன் வருதல், பிரதாபருத்திரதேவரும் வருதல்.)

நா.—கௌதமி! என்ன பண்ணுகிறாய்?

பிர.—என்ன, கௌதமி! சௌக்கியமா?

கௌ.—சௌக்கியத்துக்கு என்னகுறைவு? உயிர் மாத்திரந்தான் போகவில்லை.



# சிறுவர்க்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

---

உண்மையின் உயர்வு அல்லது நெல்லிப்பழம் பொருந்திய கதை.—துர்வாஸமுனிவனை திருப்தி செய்துவிட்டு பகவான் துவாரகை போனபின்பு ஒரு நாள் ஸாயங்காலம் அர்ச்சுனனும் திரௌபதியும் உல்லாஸமாய் விளையாடிக்கொண்டு ஒரு ருஷி தபஸு செய்துகொண்டிருந்த நெல்லிமரத்தடியில் வந்தார்கள். அங்குவந்ததும் மரத்தின்மேல் இருந்த அழகிய நெல்லிக்கனியை திரௌபதி கண்டு அதைத் தனக்குப் பறித்துத்தரவேண்டுமென்று கேட்க அர்ச்சுனன் அவ்வாறே செய்தான். அதைக்கண்ட அருகிலிருந்த முனிகள் அர்ச்சுனனைநோக்கி இம்மரத்தடியில் தவம்செய்யும் முனிவர் ஆகாரத்திற்காக இந்த நெல்லிமரம் சிவஸங்கல்பத்தால் உண்டாயிருக்கிறது. அதில் பன்னிரண்டுவருஷத்திற்கு ஒருதரம்தான் பழம் பழுத்து இந்தமுனிவர்கையில் விழும். அவர் அதை அருகிலிருப்பவர்களுக்குக் கொடுத்துத்தாமும் புசித்து தவம்செய்யத் தொடங்குவார். பழம் நாளைக்கு விழவேண்டியது. நீ இன்று இவ்வாறு செய்துவிட்டபடியால் உனக்கு ருஷிசாபம்வருமென்று மறிவித்தனர். இதை அர்ச்சுனன் தருமபுத்திரரிடம் சொல்ல பாண்டவர்கள் எல்லோருக்கும் மிகுந்த துக்கம் வந்தது. அவர்கள் கிருஷ்ணபகவானைத் தியானித்தனர். உடனே அவர்வந்து அவர்களை நெல்லிமரத்தடிக்கு அழைத்துப்போய், 'உண்மையால் ஆகாதகாரியம் ஒன்றும் இல்லை. உங்கள் மனத்திற்குள் அந்தரங்கமாக இருக்கும் ரகஸிய எண்ணத்தை வெளியிடுவீராயின் இந்தப்பழம் மரத்தை நோக்கி மெதுவாக ஏறிமுன்போல ஒட்டிக்கொள்ளும்' என்றார். அப்பொழுது தருமபுத்திரர், 'தர்மமும், பொறுமையும், கிருஷ்ணபகவானுமே, என் மனத்துள் ஸதா ஊறிக்கொண்டிருப்பன. பாபம் முதலியவைகள் என் மனத்துள் நுழைய நான் இடங்கொடுப்பதில்லை.' என பழம் இரண்டுமுழம் ஏறியது. பீமன் 'பிறன் பெண்சாதியை ஸஹோதரி என்று பாவிக்கவேண்டும், பரநிந்தைகூடா, பிறர்துக்கத்தைத் தன் துக்கமாக பாவிக்கவேண்டும் பிறன் பொருளை வெறுக்கவேண்டும், என்பதுமே நான் எண்ணும் எண்ணங்கள், என பழம் பின்னும்,இரண்டுமுழம் ஏறியது. அர்ச்சுனன் 'உயிரைவிட மானம்,மேல் ஆதலால் மானத்தைக் காப்பாற்றவேண்டும், மானமே உயர்ந்தகுலத்

திற்கு ஸமானம்' என்று தன் கருத்தைவெளியிட்டான். உடனே பழம் இரண்டுமுழம் உயர்ந்தது. அப்பொழுது நகுலன் முன்வந்து 'ஞானமும் கல்வியும் இல்லாதவர்கள் பதருக்கு ஸமானம்' என்றுசொல்ல கனி இரண்டுமுழம் உயர்ந்தது, அப்பொழுது ஸஹாதேவன் 'ஸத்யமே என்தாய், ஞானமே தந்தை, தர்மமே துணைவன், கருணையே ஸ்நேஹிதன், சாந்தமே பெண்சாதி, பொறுமையே எனக்குப் பிள்ளை' என்றதும் கனி இரண்டுமுழம் ஏறியது. பின்பு திரௌபதிவந்து மிகுந்த வெட்கத்துடன் 'எனக்கு ஐந்து கணவர் இருந்தாலும் என் மனம் என்னை ஓர் ஸமயங்களில் மோசஞ்செய்து வேறுபுருஷனை நாடிப்போகும். ஆகையால் இதை உற்றுநோக்கில் ஒருபுருஷர் யாராவது இருக்கிறவரையில் பதிவ்ருதாஸ்திரீகளே உலகில் இல்லை' என்று எனக்குத் தோற்றுகிறது என்று சொல்லவும் பழம் மரத்தில் முன்னிருந்த இடத்தில் ஒட்டிக்கொண்டது. எல்லோரும் வியப்படைந்து தத்தம் இருப்பிடம் சென்றனர்.

*.*

குரங்குகளின் கூரியபுத்தி.—பம்பாய் ராஜதானி ஷோலாப்பூர் ஜில்லாவைச்சேர்ந்த யோகராஜக் கிராமத்தில் ஓர்குரங்காட்டி இருந்தான். அவன் ஒருஆட்டையும், மூன்று குரங்குகளையும் வைத்துக்கொண்டு அவைகளை ஆட்டிப் பிழைத்துவந்தான். சென்றமாதம் அவ்வூராரில் சிலர் குரங்காட்டியைநோக்கி 'உன் ஆடு நன்றாக கொழுத்திருக்கிறது. எங்களுக்குக் கொன்றுதின்னக் கொடு' என்று கேட்டனர். அதற்கு அவன் தான் அந்தஆட்டை மிகுந்த அன்புடன் வளர்த்துவந்ததாகவும், அதுவே தன் பிழைப்பிற்குக் காரணமாக இருக்கின்றது என்பதாகவும், ஆதலால் அதைத் தன்னால் கொடுக்கமுடியாது என்பதாகவும் சொன்னான். அவர்களுள் ஒருவன் எப்படியாவது ஆட்டைப் பிடுங்கிக்கொள்வதே ஸரியென முயற்சிப்பதைக் கண்ட குரங்காட்டி தன் கையிலிருந்த ஸம்பாத்தியமாகிய நான்குரூபாய்களை அவன்கையில்கொடுத்து, வேறு எங்கேயாவது போய் வேறொருஆட்டை வாங்கிக்கொள் என்பதைக் குறிப்பிக்க, அந்தமூடன் குரங்காட்டிக்கும் ஆட்டிற்கும் இருந்த அன்பின் வலிமையைக் கவனியாதவனாக அந்தஆட்டை அவனிடமிருந்து பலாத்காரமாய்ப் பிடுங்கிக்கொண்டான். அப்பொழுது குரங்காட்டி பிரிவாற்றாமையால் மிகவருந்தி அந்த ஆட்டைக் கைப்பற்றிக்கொள்ள யத்தனிக்க, எங்கே தனது குற்றம் வெளியாய் விடுமோ என்று பயந்த அவ்வூரான் ஆட்டைக் கொன்றுவிட ஏற்பாடுகள் செய்துவிட்டு குரங்காட்டியை இகழ்ந்து கொன்று அவனை அருகாமையிலிருக்கும் ஓர் காட்டில் இருந்த மரத்தடியில் புதைத்துவிட்டான். ஆட்டை மிகுந்த அன்புடன் வளர்த்தவன் குரங்குகளையும் அவ்வாறே வளர்த்திருப்பான் என்பதற்கு என்ன ஸந்தேகம். தமது அன்பான எஜமானனை அவ்வூரான் படுத்தும்பாடுகளை எல்லாம் கவனத்துடன் பார்த்துவந்த குரங்குகளில் ஒன்று அவனை புதைத்த இடத்திலேயே காவலாக நின்றுவிட்டது. மற்றொரு குரங்குகொலைசெய்தவன் வீட்டிலேயே காத்திருந்து கொல்லப்பட்ட தனது நண்பனை ஆட்டின்தோலை மிகுந்தபரிவுடன் எடுத்துக்கொண்டு தன் எஜமானன் உடல் புதைக்கப்பட்டிருந்த இடத்திற்கு அருகாமையில் உள்ள ஓர் மரத்தின்மேல் வந்து ஏறிக்கொண்டுவிட்டது. மூன்றும் குரங்கு ஊரெங்கும் அன்று உலாவிக்கொண்டிருந்தது. அப்பொழுது போலீஸ் ஸேவகனைக்காண அது அவனது மேல்துணியைப் பிடித்துக் காட்டுமுகமாய் இழுக்க, அவன் அதை இரண்டொருதடவை ஓட்டிப்பார்த்தான். அந்தக்குரங்கு அடிக்கடி அவனைக்கடிக்காது ஒரேபக்கத்தை நோக்கி இழுக்க அவன் அதன்பின்னேபோகத்தொடங்கினான். அது அவனை மேல் இழுக்காமல் முன்னேவழிகாட்டிக்கொண்டுசென்று அந்த ஸேவகனைத் தன் எஜமானன் புதைக்கப்பட்டிருந்த இடம் கொண்டுவர, அங்கிருந்த குரங்கும் வந்த குரங்கும் சேர்ந்து மண்ணைப்பறித்துத்தமது எஜமானன் தலைமயிர்தெரியும் அளவும் போய்நின்றுவிட்டன. உடனே ஸேவகன், மேல்பறித்து, குரங்காட்டியினது பிணத்தை வெளியில் எடுத்தான். மரத்தின்மேல்ஆட்டுத்தோலோடு இருந்த குரங்குகீழே இறங்கிவந்து ஸேவகனை இழுக்க அவன் இந்தப் பிணத்திற்குவேண்டிய ஏற்பாடுகள்செய்துவிட்டுமூன்றும் குரங்குடன்போக, அது அவனை தன் நண்பனை ஆட்டையும் தனது அன்புள்ள எஜமானனையும் கொன்றபாபியின் வீடுகொண்டுசேர்த்தது. அங்கு அந்த பாபியைக்கண்டதும் இக்குரங்கு அவன் மேலே விழுந்து பிடுங்கத்தொடங்க ஸேவகனுக்கு நடந்த விஷயங்கள் ஒருவாறு மனதிற்குப்பட்டன. அந்த பாபியை பிடித்து சிறையில் இட்டுவிட்டு அந்த ஸேவகன்மூன்று குரங்குகளையும், ஆட்டுத்தோல், பிணம் முதலியவைகளையும் போலீஸ் கச்சேரிக்குக் கொண்டுபோய் வைத்திருக்கிறானாம். தன் எஜமானன்விஷயத்தில் இவ்வளவு அன்புடன் பாடுபட்டுஸாக்ஷியாகக் காத்திருக்கும் குரங்குகளை சுற்றுமுள்ள ஊர்களிலிருந்துஅநேகர் கூட்டங்கூட்டமாக வந்து பார்த்

துப்போகின்றனராம். விசாரணை ஆவணி மாதம் 9-ம் தேதியில் நடக்கப்போகின்றது. குமரகுருபர ஸ்வாமிகள் தமது நீதிநெறிவிளக்கத்தில்

"மறைவழிப் பட்ட பழமொழி தெய்வம்
பறையறைந் தாங் கோடிப் பறக்கும்—கழி முடை
புன்பலா னாற்றம் புறம்பொதிந்து மூடினூ உம்
சென் றுதைக்குஞ் சேயார் மூக்கத்து"

என்று கூறியுள்ளபாட்டின் கருத்து இக்கதையில் எவ்வாறு வெளிவந்திருக்கின்றது பாருங்கள் !

⁂

கெடுவான் கேடு நினைப்பான்.—பங்காளதேசத்தில் ஓர் தெருப்பள்ளிக்கூடம் உபாத்தியாயர் இருந்தாராம். அவரிடம் கொஞ்சபிள்ளைகள் படித்துவந்தார்கள். அவர்களுள் ஓர் பணக்காரன் பிள்ளையும் இருந்தானாம். அவன் ஒருநாள் விலையுயர்ந்த ஆபரணங்கள் பலவற்றை அணிந்துகொண்டு பள்ளிக்கு வந்தான் இவைகளை எவ்விதத்திலாவது தாம் கைப்பற்றிக்கொள்ளவேண்டும் என்ற துர்எண்ணம் அந்த உபாத்தியாயருக்குவர அவர் அன்றுமாலை மற்றையப் பிள்ளைகளெல்லாம் போகச் சொல்லிவிட்டு பணக்காரவீட்டுப் பிள்ளையைமாத்திரம் நிறுத்திக்கொண்டார். தனக்கு ஏதோ புதியவிஷயம் ஒன்று கற்பிக்கப் போகிறார் என்று மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டு அந்தப்பையன் நிற்குந்தருணத்தில் உபாத்தியாயர்வந்து அவனை பயமுறுத்தி நகைகளை கழற்றிக்கொண்டுவிட்டார். வெளியில் போகவிட்டால் எங்கே பையன் தனது ரகஸியத்தை வெளிவிட்டுவிடுவானோ என்ற பயத்தால் உபாத்தியாயர் அருகாமையில் இருந்த ஓர் கல்லை எடுத்து அவனை அதனால் மெதுவாகக் குத்திக் கொல்லத்தொடங்கினார். அப்பொழுது பையன் வலிபொறுக்கமுடியாது தன்னைக் கஷ்டப்படுத்தாது ஓர் பெரியகல்லை எடுத்து தன் தலையில் இட்டுக் கொன்றுவிடுவது நலமாக இருக்குமென்று கேட்டுக்கொள்ள உபாத்தியாயர் பெருங்கல்லைத் தேடிச்சென்று அத்தகைய கல்லொன்றைக் கண்டார். உடனே அதன் அருகில்சென்று அதைப் புரட்டத்தொடங்க அதன் அடியில் இருந்த பாம்பு ஒன்று அவர்கையைச் சுற்றிக்கொண்டது. அவர் தம்மை அறியாது கூக்குரல் இடத்தொடங்கினார். உடனே அங்கு ஊர்கூடிவிட உபாத்தியாயர் கொடுந்தொழில் வெளியாயிற்று. கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த குழந்தைக்கு வேண்டிய சிகிச்சைகள் செய்யப்பட்டன." காலக்கிரமத்தில் உபாத்தியாயருக்குத் தகுந்த சிக்ஷையும் விதிக்கப்பட்டது.

சேம்பேரியும், தர்ம கர்த்தனும்.—ஒரு கோயிலில் ஓர் மஹான் வாஸம்செய்துகொண்டிருந்தார். வர் அங்கு ஓர்மூலையில் கண்ணை மூடிக்கொண்டு காலைமுதல் நடு ராத்திரிவரையில் அசையாது உட்கார்ந்திருப்பது வழக்கம். நடுவில் தேகபாதை நிவர்த்திக்காக வெளியே ஒருவேளை போனால் போவார். மற்றையபடிக் கோவிலில் எவ்வளவு கோலாஹலமான உத்ஸவம் நடந்தாலும் ஸரி, எவ்வளவு கூட்டம் நடமாடிக்கொண்டிருந்தாலும் ஸரி, அவர் தமது மூலையைவிட்டு அசைவதே இல்லை. அந்தக் கோவில் தர்மகர்த்தர் இவரை ஓர்பெரிய மஹான் என்று எண்ணித்தினம் கோவில் மடைப்பள்ளியிலிருந்து ஒரு பட்டைச்சோறு இவருக்குக் கொடுத்துவிடும்படி ஏற்பாடுசெய்துவிட்டு, ஒவ்வொருநாளும் தாம் வீட்டிற்குப் போவதற்குமுன் மிகுந்த பயபக்தியுடன் இம்மஹானுக்குத் தவறாது வந்தனை வழிபாடுகள்செய்துவிட்டுப்போவது வழக்கம். கொஞ்ச வருஷத்திற்கெல்லாம் இந்தபக்திமானான தர்யகர்த்தர் இறக்க அவரது பிள்ளை கோவிலுக்கு தர்ம கர்த்தாவாக வந்தார்.

இந்தப் புது தர்மகர்த்தனும் மற்றைச் சிறுவர்கள் போல தமது பெரியோர்களை புத்திஹீனர்கள் என்றுகொண்டு கோயில் விஷயங்களை தன் மனம் போன போக்கே சீர்திருத்தத் தொடங்கினன். அந்த சீர்திருத்தங்களுள் மூலையிலிருந்த சேம்பேரிக்கு—மஹானுக்கு அவன் கொடுத்தபெயர்—அதுவரையிலும் கொடுத்து வந்த பட்டைச்சோற்றை நிறுத்திவிட்டது ஒன்றாக இருந்தது. அந்தச் 'சேம்பேரியோ' தன் மூலையைவிட்டு அசையவே இல்லை. நடந்த சீர்திருத்தத்தால் அவன் தாக்கப்பட்டவன் போலக் காணப்படவில்லை ஆனால் பட்டைச்சோறு நின்றுபோய்விட்டபடியால் தமக்குப் பசிவந்தவேளை மாத்திரம் மத்தியானஸமயத்தில் கோயிலைவிட்டு வெளியேறி சிலவீடுகள்சென்று அவ்வீட்டோர் அன்புடன்இட்ட பிச்சை உண்டு தம்மிடம் வந்து உட்கார்ந்து கொண்டிருந்தார் இம்மஹான். இப்படித் தனது சீர்திருத்தத்தால் பயனடையாது முன்போலவே 'சேம்பேரி' மூலையில் அசையாது இருப்பது

தர்மகர்த்தனுக்கு திருப்தியை உண்டாக்கவில்லை; ஆதலால் 'சேம்பேரி'க்கு சீர்திருத்தம் நடந்தது தெரியுமோ இல்லையோ என்ற ஸந்தேகம் மஹான் நடந்துகொண்ட மாதிரியால் அவனுக்கு வந்துவிட்டது. பார்ப்போரிடமெல்லாம் மரியாதையை அடைந்து கர்வம் மண்டைகொண்டிருக்கும் தர்மகர்த்தனுக்கு 'சேம்பேரி' மாத்திரம் தனது சீர்திருத்தத்தைக் கவனியாது அலக்ஷியம்செய்வது மிகுந்த கௌரவக் குறைவாகப்பட அவனுக்கு புத்தி சொல்லி அவனை நல்லவழிக்கு திருப்பவேண்டும் என்ற எண்ணங்கொண்டான்.

இந்த சோக்கத்தோடு மஹானிடம்வந்து வாய்கூசாது மரியாதையுமின்றி 'நீ ஏன் இவ்வாறு வீண் காலம் கழிக்கிறாய்? உன் சிறந்த வாழ்நாளுள் ஏன் இவ்வளவு சேம்பேரியாகத் திரிகிறாய்?' என்று காட்டான்போல் திடீரென்று கேட்டான். இந்தஸமயத்திலும் மனங்கோணாது மஹான் புன்னகையுடன் அவனுக்கு நல்வரவுகூறி அருகாமையில் உட்காரச் சொன்னார். தர்மகர்த்தன் அவ்வாறே செய்ய மஹானும் முன்போல மௌனமானார். ஐந்து நிமிஷமாயிற்று தர்மகர்த்தன் கேள்விக்கு பதிலே வரவில்லை. அவருக்கு பதில் வாராதென்றே தோற்றியது ஓர் ஸம்பாஷணையும் இன்றி ஆந்தைகள்போல உட்கார்ந்திருப்பது அவனுக்கு பிடிக்காததால் இந்த ஸங்கம் அவனுக்கு மிகுந்த கஷ்டத்தை உண்டாக்கியது. மனதடங்கி அவனால் உட்கார முடியவில்லை. அநேக விஷயங்கள் அவன் மனதை சின்னபின்னமாகச் சிதற அடித்தன. அவனுக்குப் பரபரப்பு அதிகமாக அவன் எழுந்துபோகத் தலைப்பட்டான். அந்தத் தருணத்தில் மஹான் கண் விழித்து நோக்கி மிகுந்த விநயத்துடன் தர்மகர்த்தனை உட்காரும்படி வேண்டினார். அவனுக்கும்அவரைத் தட்டிக்கொண்டு எழுந்துபோக முடியவில்லை. ஆனால் அவனால் எவ்வளவு நாழிகைதான் சும்மா உட்கார்ந்திருக்க முடியும். வரம்பு கடந்துவிட்டபடியால் அவன் மனம் அலை பாய்ந்து ஓடியது. இப்படி இவன் உட்காரவு மாட்டாது எழுந்துபோகவுமாட்டாது கிடந்து தத்தளிக்கையில் நிசசிந்தையாய் சாந்தமாய் பிரஸந்ந வதனத்துடன் மௌனமாக மஹான் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான்! இரண்டாம் தரம் எழுந்துபோக யத்தனித்தான். அப்பொழுதுகூடக் கொஞ்ச நாழிகை இருந்துபோகும்படி மஹான் வேண்டினார். அதற்கு சிறுபிள்ளையான தர்மகர்த்தன் 'அஸாத்யம்! மிகக்கடினம்! இனிமேல் என்னால் அரைநிமிஷம்கூட இங்கு தரிக்கமுடியாது. கண்டேன்! கண்டேன்! சிந்தையை அடக்கியே சும்மாவிருத்தல் அரிதென்று கண்டேன்! உம்மைப்போல தெளிவாக உட்கார்ந்திருப்பது என்னால் முடியாது' என்றுசொல்லிக்கொண்டே எடுத்தான் ஓட்டம். மஹான் ஸந்நிதியிலிருந்து ஓடிப்போனதும் அவன் முதலில் செய்தது யாதெனில் 'ஓடியாடித் திரிபவர்க்கு ஒரு பட்டைச்சோறு, இருந்தவிடத்தே இருப்பவர்க்கு இருபட்டைச் சோறு' என்று சொல்லிக்கொண்டு மஹானுக்கு தினம் இரண்டுபட்டைச்சோறு கொடுக்கும்படி மடைப்பள்ளிக்காரனுக்கு உத்தரவுசெய்தான்

இச்சிறு வேடிக்கைக்கதை இடைவிடாத சாந்த நிஷ்டையின் அருமையைக்காட்டுகின்றது. இதன் கஷ்டத்தை முற்றும் உணர்ந்தவராகத்தான் தாயுமானவர் பின்வருமாறு கதறுகிறார் :—

கந்துகமதக்கரியை வசமாய் நடத்தலாங்
  கரடிவெம்புலி வாயையுங் கட்டலா
மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாங்
  கட்செவியெடுத்தாட்டலாம்
வெந்தழலினிரதம் வைத்தைந்து லோகத்தையும்
  வேதித்து விற்றுண்ணலாம்
வேறொருவர் காணாமலுலகத்துலாவலாம்
  விண்ணவரை யேவல் கொளலாஞ்
சந்ததமு மிளமையோ டிருக்கலா
  மற்றொரு சரீரத்தினுட் புகுதலாஞ்
சலமேல் நடக்கலாங் கனல் மேலிருக்கலாம்
  தன்னிகரில் சித்திபெறலாஞ்
சிந்தையை யடக்கியே சும்மாவிருக்கின்ற
  திறமரிது சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்டவறிவான தெய்வமே
  தேசோம யானந்தமே.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

## ஸீதை அல்லது தர்மத்தின் ஸ்வபாவம்

### 2. பிரிவுற்றகாதை

"நாயகனுடைய பாலத்தை ஒற்றுநடத்தல் வேண்டும்; அவரது மனம்கோண இடம்வரச் செய்யக்கூடாது அவரிருக்குமிடம் தான் எனக்கிடம்; அவர்துன்பத்திலிருப்பின் நானும் துன்பத்தையே வரிப்பேன்; அவர் பெருமையடைந்தால் அப்பெருமையில் யான் பெருமை அடைவேன்; அவருடைய மனம் ஸங்கடமடைந்தால் நானந்த ஸங்கடத்தைத் தீர்த்துத்தான் மறுவேலை பார்ப்பேன்; அவர்மனம் முறியும்படியாகச் செய்யமாட்டேன்; அவர் கீழ்தசையிலிருப்பது எனக்கொருவிதக் கீழ்மையையு முண்டாக்காது; அவர் கீழ்மையிலிருப்பின், நான் மேன்மையைவிரும்பினால் யான் நாயகத்ரோகி ஆகிறேன்; அவர் வீடு காடாயிருப்பினும் சரி, அல்லது, நாடாயிருப்பினும் சரி, எனக்கது எதுவாயினும் பேதமென்பது கிடையாது; அதுவே என்மனதிற்கு உத்ஸாகமூட்டுமிடமாக இருக்கிறது; ஆனதினால் அவர் காடுசென்றால் யானும் காடுசெல்வேன்; அவர் நாட்டிலிருந்தால் யானும் அவரோடு இருப்பேன்; அவருடைய நிழல்போல் அவரோடே உலாவுவேன்; மூலபுருஷன் அவன்தான் என்று முழுதும் நம்பிக்கையுள்ளது" என்று இவ்வகை ஆகிய எண்ணங்கள் ஸீதை மனத்தில் பட்டு தான் இராமனோடு காட்டையடைய புறப்பட்டனள்.

சித்ரகூட பர்வதத்திலிருந்து, காட்டினழகும் மரங்களின் வளர்ச்சியும், நிலத்தின் செழிப்பும், ஆற்றினது போக்கும், ஓடைகளுடைய வீட்சியும், குன்றுகளின் கம்பீர நிலைமையையும் அந்தஃகரணத்தின்மேலவை செய்யும், பதிப்பு மிவற்றையெல்லாமானந்தத்துடன் கண்டு கண்குளிர ஆனந்தம் கொண்டனள். கணவனது பெருஞ்செயல்களைக்கொண்டு அவன்மேல் அன்புபொங்கி "அவர்க்கு நாம் செய்யவேண்டிய செயல்கள் இன்ன முயரவேண்டிய" தென்று எண்ணிக்கொண்டனள்.

இவர்களிவ்வாறு காட்டில் நடந்துக்கொண்டு இருக்கும் காலத்தில் பெரியாரது தர்சனவிசேஷத்தால் வரும் ஸுகத்தை அனுபவித்தனர். அத்ரி ரிஷியின் ஆச்ரமத்தை அடைந்தவரது உபதேசமொழிகளை எல்லாம் பெற்று தண்டகாரண்யத்தை அடைந்தனர். இவ்விடம் அகஸ்தியரைக்கண்டு அவருடைய உத்தரவின்பேரில் பஞ்சவடீதீரம் அடைந்தார். இவ்விடம் லக்ஷ்மணன் ஆச்ரமம் ஒன்று கட்டினான். இதில் ஸீதையும் இராமனும் வசிக்க, லக்ஷ்மணர் இவர்களைக் காப்பது வழக்கம்.

மரங்களடர்ந்து, பூப்பிஞ்சுங்காயும் கொஞ்சும்படிக்கு செழித்து, ஓடைகளிடைத் தம் பலத்தை யீன்று வந்தாரது பசிப்பிணியை போக்கும் காட்டிடைப்பட்டவர்க்கு கவலையுண்டோ? ஸீதைக்கிது ஓர் உத்யான வனமாகப்பட்டது. மான் கூட்டங்களோடு விளையாடுவதும் மலர்களைப் பறித்து பாடுவதுமே அவள் செயல்களாயின. கவலை என்பது அவள் மனதிற் கிடையாது. தனது கணவனுக்கு செய்யவேண்டியதை செய்துவிட்டு அவனோடே காட்டிலுள்ளவற்றை எல்லாம் கண்டானந்திப்பது வழக்கமாக ஆயிற்று.

அளவிற்கு மிஞ்சினால் அமுதமும் விஷமாகும், என்றொரு பழமொழியுண்டு. ஸுகங்கள் தனக்கும் தெரியாமல் அதிகமாகிவிட்டால், அச்சுகங்களே நமக்குக் கெடுதியை உண்டாக்குகின்றன. இவை எல்லாம் நன்னிலைமையில் இருப்பவர்க்குப்படாது. 'இதனால் ஒருகஷ்டம் வருவதாவது'!, என்றே அவர்கள் சொல்லுவார்கள். பித்தம் தலைக்கேறினால் புத்தி உண்டோ! விளையாட்டிலேயே எப்பொழுதும் பொழுதைப்போக்கினால் அதுவும் ஓர்விதப் பித்தந்தான். இப்பித்தகுணத்தினால் அவர்க்குவருங் கேடு இன்னதென்று தெரிகிறதில்லை நமக்கு வரும் துக்கங்களும் சிறந்த நன்மைசெய்ய வந்தாற்போல வருகிறது. இதைத்தடுப்பது யாராலுமுடியாது. முடியாதென்றும் நம்மாற் சொல்லமுடியாது. இந்தமாதிரியாகவே ஸீதைக்கும் ஓர்விபத்து வந்தது. அவ்வொதிரில் அழகிய பொன்னிறமாகிய மான் ஒன்று துள்ளித்துள்ளிக் குதித்தது. அதைப் பிடிக்கமுயன்றாள். அது அவள் கைக்குள்ளகப்படவில்லை. அதை எவ்வாறேனுமடையவேண்டுமென்பதே அவள்கவலை. தன்னால் முடியாதுபோனதும் தன்கணவனை அதைப் பிடித்துத் தரவேண்டுமென்று கெஞ்சினாள் அவர் பிடிக்க வாரம்பித்தவுடன் அம்மான் நெடுந்தூரம் புதர்க்குள்சென்று மறைந்தது. இராமனுமதைப்பின்பற்றி நெடுந்தூரம் சென்றுவிட்டான்.

சென்ற கணவன் வரவில்லை என்று மிகவும் ஏக்கங்கொண்டாள் ஸீதை பெண்களுக் கெப்பொழுதும் பின்புத்தி என்று பழமொழியுமுள்ளது. ஏன் தெரியாமலவரை அனுப்பினேனும் எனக் கவலைப்பட்டாள் ஸீதை. நாயகி லக்ஷணமென்பதிதுதான். தன் கணவன்வராமையால் அவர்க்கென்னவாயிற்றோ என்று மனத்தினென்னென்னவோ எண்ணினாள். எண்ணியும் என்ன? இராமன் வரவில்லை. அவளுடைய மனமுழுதும் அவர்பாலே வருந்துகிறது. நடுவில் "ஹா! லக்ஷ்மணா!" என்ற ஒரு ஓசைகேட்டது. க்ஷிப்ரமையாக ஸீதை மூர்ச்சையோடு கீழ் வீழ்ந்துவிட்டாள்.

தானே தன் கணவனுக்கு கெடுதியுண்டாக்கியதாக அவளுக்குப்பட்டது. சற்று தணிந்து லக்ஷ்மணனைக் கூவி "உன்மனங் கல்லோ, உன்னைக் கூப்பிட்டும் உனக்கு மனம் வரவில்லையோ? ஹா! மாயாவி!" என்றலறினாள். தன்கணவனுக்கிவன் உதவி செய்யவேண்டியவனாயிருக்க இவன் செய்ய மனங்கொள்ளவில்லை என்று ஆத்ரத்துடன் இன்னம் சிலமொழிகள் சொல்ல ஆரம்பித்தாள். இதற்குள் "அம்மா! கோபியாதேயுங்கள்! உங்களைக் காக்க யான் இங்கு இருக்கிறேன். என் தலைவன் என்னை இங்கேயே இருக்கும்படியாக உத்தரவளித்திருக்கிறார். ஆகையால்தான் நான் போகவில்லை.—" எனச் சொல்லி லக்ஷ்மணன் முடிப்பதற்குள் "ஹே! சண்டாளா! உனக்கிந்த துர்புத்தியிருக்கும் என்று நான் நினைக்கவேயில்லை. அவரிருக்கும் வரை இச்சகம் பாடி நடித்துவிட்டு, வெகு நல்ல நடத்தையுடையவனாகக் காட்டிக்கொண்டு, இவ்வாறெண்ண ஆரம்பித்துவிட்டனை?—" என்று ஸீதை சொல்லிக்கொண்டிருக்க "அம்மா! தவறான வார்த்தை என்மேற் சொல்லுவது தகுதியல்ல. என் தமையனார் வார்த்தையைக் குறுக்கிட்டு நான் நடவேன். இப்பொழுது கூவிய குறலும் என் தலைவனதல்ல" என்று லக்ஷ்மணன் சொல்ல, ஸீதை "நன்றாயிருக்கின்றது! இவ்வளவுதூரமும் வந்துவிட்டதா! என்னைப் பெண்டாளுமெண்ணங்கூட உனக்குள்ளதல்லவா? அதற்குத்தான் நீ இவ்வாறு அவன் சாகட்டும் என்று இருக்கின்றனை அல்லவா—" என சொல்லி முடிப்பதற்குள் 'ஆ! ஆ!' என்று அலறிக்கொண்டே "உன்னுடைய வார்த்தைக்குப் பயப்பட்டு, என் தமையன் வார்த்தையைமீறிப் போகிறேன். அதனால்வரும் தீங்கிற்கு நான் ஆளாக மாட்டேன்" என்று சொல்லிவிட்டு, லக்ஷ்மணன் ராமனைத் தேடச்சென்றான்.

இவ்வாறு ஸீதை சொல்லியதெல்லாம் தனது கணவன்மேற்கொண்ட ஆசையினாத்ரத்தினாற்சொல்லியதுதான். இதற்காக அனுபவிக்க கஷ்டம் வருமென்பதற்கு சந்தேஹமுண்டோ? கஷ்டங்கள் வருவதும் இனிமையான உருவத்துடன்தான் வரும். அவ்வாறே ஓர் சந்நியாசி ஸீதைமுன் வந்துநின்றான். மிகு வணக்கத்தோடு அவர்க்கு செய்யவேண்டிய நியமங்களை எல்லாம் செய்தாள். அஹங்கார உருவங்கொண்ட அப்பொய் முனிவன் யானிராவணன் உன்பால் மோகங்கொண்டேன் யானே இவ்வாறு பொய்ம்மானை ஏவி உன் உறவினரைத் துரத்திவிட்டு உன்னிடம் வந்தேன். என்னோடு வா. உனக்குவேண்டியதெல்லாம் தருவேன். யான் குபேரன் தம்பி. எனக்கு ஸமானமானவர் உலகில் கிடையாது என்று சொல்லிக்கொண்டிருப்பதை அவள் ஒன்றுங் கவனிக்கவில்லை. ஆனால் "ராமா, ராமா" என்னும் மந்திரம் மாத்திரம் அவள்வாயினின்று விடைவிடாமல் வந்துகொண்டேயிருந்தது. பார்த்தான் இராவணன். யுக்தியினால்தான் நாயிவளைக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தோடு தன் வேடங்களைந்துவிட்டு, அவளை ஆசிரமத்துடனே பெயர்த்துத் தேர்மேல்வைத்து லங்கைப்பார்சுவமாகத் தேரை ஓட்டினான். வெகுதூரம்வரை "ராமா, ராமா" என்னும் சப்தமே காற்றைக்கலந்து ஒலித்துக்கொண்டிருந்தது. அது இராமர் காதில் விழுந்ததோ விழவில்லையோ நமக்குத்தெரியாது. ஆனால் அந்தசப்தம் முடிவில் நன்மையுண்டாக்குவதற்கு மூலமந்திரமாக நின்றது என்று நாம் சொல்லவேண்டியதில்லை.

---

"கணவன் தனக்கு வேலைசெய்யவேண்டும். கணவன் தன் எண்ணப்படி இருக்கவேண்டும். கணவன் தன் கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். கணவன் வீட்டார் தன் வழிக்கடங்கி வரவேண்டும். அவரை தான் அடக்கி நடக்கவேண்டும். பானை பிடித்தவள் பாக்கியவதி; யானே வீட்டிற்கு பெரியவள்" என்பவள் கீழ்குலத்தினுதித்தவளல்லாவிட்டாலும், கடையினுங் கடையவளே ஆகிறாள். ஸீதை இலக்ஷ்மணன் மொழியைக் கேளாது இராமனை மானைப்பிடித்துக் கொடுக்கும்படிக் கேட்டு, கஷ்டமடைந்தாற்போல் கஷ்டமடைவாளென்பதற்கு ஸந்தேஹங் கிடையாது.

# விசேஷ வர்த்தமானங்கள்

## GENERAL NEWS

இந்திய அரசாட்சியும் வித்யாப்யாஸமும்.—கவர்ன்மெண்டார் வித்யாப்யாஸத்தை லகுவாய் அடையப்படும்படி செய்வதனால் பெரிய தப்பு செய்துவிட்டதாக லார்ட் லாமிங்டன் அபிப்பிராயப்படுகிறார். கவர்ன்மெண்டார் இந்தியாவில் ஒரு ஆளுக்கு வாஸ்தவமாய் எவ்வளவு செலவிடுகிறார்கள் என்பதை இக்கனவான் அறியவில்லைபோலும். ஆனரபில் கோக்லேதான் இவருக்கு பதில் சொல்லவேணும். கோக்லேயவர்கள் 1908ஆ மேமீ கல்கத்தாவில் அரசிறைக்கணக்கு (Budget) தர்க்கத்தில் செய்த உபன்யாஸத்திலிருந்து பின்வருமளவை எடுத்திருக்கிறோம்.

“ஆனரபில் E. பேகர் அவர்கள் இந்தியாவையும் ஐரோப்பிய தேசங்களையும் ஒத்துப்பார்க்க ஆசையுள்ளவராயிருக்கிறபடியால் அவருக்கு நேர்த்தியாயும், அறிவிக்கக் கூடியதாயுமிருக்கிற பின்வரும் அட்டவணையை எடுத்துரைக்கலானேன். இவ்வட்டவணையில் ஆனரபில் பேகரவர்கள் ஒத்துப்பார்க்க எடுத்துக்கொண்ட தேசங்களையே எடுத்துக்கொண்டு அவைகளிலும் இந்தியாவிலும் வித்யாப்யாஸத்துக்காக எவ்வளவு செலவழிக்கப்படுகிறதென்று பார்ப்போம்

| தேசம். | ஒருவனுக்கு எவ்வளவு செலவு. ஷி. பெ. |
|---|---|
| பிரான்ஸ் | 5—4 |
| ஜெர்மனி | 4—0 |
| இத்தலி | 1—8 |
| ஆஸ்டிரியா | 2—4 |
| நெதர்லெண்ட்ஸ் | 4—3 |
| இந்தியா | 0—1½ |

* * *

சுதேசி மோடார்வண்டி.—ஜெஸ்ஸோரில் நடந்த வியவஸாயகைத்தொழில் காக்ஷியில், ஒரு இரும்புக் கூண்டைப்பத்தியும் நளதங்கர் மகாராஜாவின்மேல் பார்வையில் செய்யப்பட்ட ஒரு சுதேச மோடார் வண்டியைப்பத்தியும் வெகுவாய் சிலாகித்துச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். மகாராஜாவானவர் ஒருபெரியதிறமையுள்ள சிற்பக்காரர். நீராவிக்கப்பல்களுக்கு வேண்டிய யந்திரங்களை தானே செய்கிறார். அவர் ஒரு மோடார் வண்டியைச் செய்து முடித்ததைக் கேட்க ரொம்ப ஸந்தோஷத்தைக் கொடுக்கிறது.

* * *

ஸென்ட்ரல் ஹிந்து கலாசாலை, காசி.—சென்ற மூன்றுமாஸத்திக்குள்ளாக இக்கலாசாலைக்கு மூன்று பண்டிதர்கள் சம்பளமில்லாமல் வேலைசெய்ய வந்திருக்கிறார்கள். மிஸ்டர் தவால் பம்பாய் யுனிவர்ஸிடியில் M. A. பரீட்சையில் தேர்ந்த பேர்போன ரஸாயனசாஸ்திரியான ப்ரொபஸர் கஜ்ஜாரிடத்தில் வேலைசெய்வதை துறந்துவிட்டு இக்கலாசாலை ரஸாயன சாஸ்திரம் கற்றுக்கொடுக்க வந்துவிட்டார். காலஞ்சென்ற நியாயாதிபதி திலாங்கின் குமாரனான பி. கே. திலாங் அர்த்த சாஸ்திரத்தில் M. A. பரீட்சை மேலாகக் கொடுத்துவிட்டு இக்கலாசாலையில் சேர்ந்துவிட்டார். மூன்றாவது இக்கலாசாலை மடாதிபதி (Rector) யாகிய மகாமகோபாத்யாய பண்டித ஆதித்யராம் பட்டாசார்யாவின் ஒரேகுமாரன்.

* * *

ஓர் நெசவு தரி.—லூடியானாவிலுள்ள அக்பர் அலியென்பவர் கம்பளத்தினால் உறுதியான ஸாமான்கள் சீனச்சட்டியினாலும் செய்யப்பட்ட கைநெசவு தரி உண்டாக்கியிருக்கிறார். இத்தரி வெகு நேர்த்தியாயும் லகுவாயுமிருப்பதால் 14-வயதுள்ள சிறுமிகள் கொஞ்சங்கூட சிரமமில்லாமல் ஒருநாள்முழுவதும் அதில் வேலைசெய்யலாமாம்.

* * *

ஒரு தராசு.—மற்றொரு பஞ்சாபி கற்பிக்கிறவராகிய அமர் ஸார் ஸிம்பநாதர், சமீபத்தில் ஒரு தராசு உண்டுபண்ணியிருக்கிறார். அத்தராசானது, உண்மையான தங்கத்துக்கும் சூதுதங்கத்துக்குமுள்ள வித்தியாஸத்தை எடுத்துக்காட்டுகிறதாம். இத்தராசு வெகு புகழ்பெற்றபடியால் குவாலியர் மகாராஜா இதன் பத்திரத்தை (Patent) ரூ. 9000-க்கு வாங்கிவிட்டாராம்.

* * *

பம்பாய்க்கு ஓர் சமர்த்தன்.—பம்பாய் கவர்ன்மெண்டார் உணவு பொருள்களை, ஐரோப்பா கண்டத்தில் பெட்டிகளில் அடைக்கிறதுபோல், இந்தியாவிலும் பெட்டிகளில் அடைப்பதை ஒரு கைத்தொழிலாய் ஏற்படுத்தலாமாவென்று விசாரித்து அறியும்படி ஒரு ஸமர்த்தனை நியமிப்பதாய் ஆலோசனை செய்துகொண்டிருக்கிறதாய்த் தெரியவருகிறது.

* * *

தார்பூசப்பட்ட கடிதமும் ஜப்பானும்.-ஜப்பானில் பரதேசியான ஸாமான் கூறைபோடுவதற்கு அதிகமாய் உபயோகப்படுத்தப்படுவதில்லை. ஆகையால் பரதேசிய தொழிலாளிகள் ஸாமான்கள் உண்டுபண்ணி அவைகளை ஜப்பானுக்குக் கொண்டுபோவதில்லை. ஜப்பானில் விலையேயில்லாத தார்பூசப்பட்ட கடிதங்களை கூரைபோடும்போது உபயோகப்படுத்துகிறார்கள். இக்கடிதங்களை ஓட்டிற்கு அடியில்போட்டு மேலே ஓடு மாற்றிவிடுகிறார்கள். வெயில்காலங்களில் கனத்தமழை பெய்யும் சமயத்தில் இக்கடிதங்கள் ஈரத்தை உட்செல்லவிடாமல் காக்கிறதுடன் மழைக்காலங்களில் உஷ்ணத்தை வெளிவிடாமல் காக்கின்றனவாம்.

கைத்தொழில் பாகமும் சென்னை கவர்ன்மெண்டும்.—சென்னை கவர்ன்மெண்டார், சென்னை ராஜதானியில் மற்ற பாகங்களைப்போல கைத்தொழிலுக்கு ஓர்பாகம் ஏற்படுத்துவது நலமென்று இந்தியா கவர்ன்மெண்டாருக்குத் தெரிவித்திருக்கிறார்கள். இப்பாகம் ஏற்படுத்தப்பட்டால் தற்காலம் வித்தியாப்பியாஸ பாகத்தினடியிலிருக்கப்பட்ட கைத்தொழில்களை சம்மந்தப்பட்ட சங்கம் (Institutions) முதலானதுகள் இதனடியில் சேர்க்கப்படுவதுடன் கைத்தொழில்களைப்பற்றியுள்ள வர்த்தமானங்களும் தெரியவரும்

* * *

பருத்தியும் இங்கிலாந்தும்.—1909௵ மார்ச்சு மாஸம் 11 தேதியுடன் முடிவுபெற்றவாரத்தில் இங்கிலாந்தில் 95, 076 மூட்டை பருத்தி இறக்குமதி செய்யப்பட்டதாம். அதேதேதியில் முடிவுபெற்ற 10 வாரங்களில் 1, 544, 322 மூட்டைகளாம். அதே தேதியில் முடிவுபெற்ற வாரத்தில் இங்கிலாந்திலிருந்து 8, 525 மூட்டைகளும் அதேதேதியில் முடிவுபெற்ற 10 வாரங்களில் 69,833 மூட்டைகளும் ஏற்றுமதி செய்யப்பட்டனவாம்.

* * *

பருத்தியும் சென்னை கவர்ன்மெண்டாரும்.—சென்னை ராஜதானியில் சிலவிடங்களில் சிறந்த பருத்தி உற்பத்திசெய்ய பரீக்ஷித்துக்கொண்டிருக்கும் குடியானவர்களுக்கு தூண்டுதல் செய்யும்பொருட்டு ரூ. 5000 கொடுக்கும்படி கவர்ன்மெண்டார் வைத்திருக்கிறார்களென்று தெரியவருகிறது.

* * *

கோதுமை.--மிஸ்டர் ஹோவார்ட் (Mr. Howard) என்பவர் ஓர் புதுமாதிரியான கோதுமைதானியம் கண்டுபிடித்திருக்கிறதாக தெரியவருகிறது. இத்தானியமானது இதுவரையில் இந்தியாவில் விளைவிக்கப்பட்ட கோதுமையைக்காட்டிலும் சிறந்ததாகவும், விளைவிப்பவர்கள்கூட அதை சிலாகிக்கும்படியாகவுமிருக்கிறதாகத் தெரியவருகிறது.

* * *

சென்னை கவர்ன்மெண்டாரும் குடியானவர்களும்.—இதுவரையில் கைத்தொழில்களைப்பற்றி கிடைக்கக்கூடிய ஸமாசாரங்களும், யோசனைகளும், உதவியும் பணம்வாங்காமல் கொடுத்துவந்த கவர்ன்மெண்டார், இனிமேல் இவ்வகை உதவிபுரியவேணுமானால் பணம்கொடுக்க வேண்டுமென்றும், உதவி கேட்பவர்கள் பணம்கொடுக்க சக்தியுள்ளவர்களென்றும் தீர்மானித்திருக்கிறார்கள். ஆனால் உதவிகேட்பவர்கள் ஏழை குடியானவர்களென்று நிச்சயமாய்த் தெரியும்பக்ஷத்தில் கைத்தொழில் தலைவர் (Director of Industries) அவர்கள் கட்டின கட்டணம் முழுமையுமோ அல்லது ஓர் பாகத்தையோ அவர் யுக்தப்படி திரும்ப கொடுத்துவிடலாமென்றும் நிச்சயித்திருக்கிறார்கள்.

# புத்தகக் குறிப்பு

## REVIEW OF BOOKS

எலேன்*—ம-ள-ள-ஸ்ரீ தலந்தசாமிபிள்ளை B.,A., L.T., அவர்களால் இயற்றப்பட்டது

இது ஆங்கில கவியாகிய டெனிஸன் பிரபு எழுதிய ஒரு காவ்யம். அவர் எழுதிய "அரசனின் ஆயர் பாட்டு" என்னும் காவியத்தின் ஏழாம் பிரிவிது. ஸரியாக தமிழில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. நடையும் ஒழுங்கும் சிறந்தன. ஆங்கிலப் பெரியோரது பாவத்தை தமிழ்ப்படுத்தி, தமிழ்வசன ரசனையை விருத்திசெய்ய விரும்புவர்கள் இதை கவனமாகக் கொள்வரென்பது எமது நம்பிக்கை. புத்தகமும் எளிய விலையுடன் எல்லாரும் கொள்ளும்படியாகவிருக்கிறது.

வனஸுந்தரா*.—பண்டிதை விசாலாக்ஷி அம்மாளால் இயற்றப்பட்டது

இதனை இயற்றியவர் கூறியாங்கு பெண்விருத்திக்காக இக்கதை எழுதியதாக தெரிவதரிதன்று. பெண்பாலாரெழுதிய காதையுள் குற்றங்குறையிருப்பினுங் கூறற்பாலதன்று. அற்றேல் குற்றமின்றிய நல்லெண்ணமொடு நிசாவி எழுதியக்காதையை இற்றெனக் கூறற்றகுதியோ? இக்கதையை யாவரும் படித்து பெண்கல்வி விருத்தியை ஆவற்கொண்டு ஸரியான வழியிற் பெருகச்செய்வாரென்பது எமது கோரிக்கை. கதையினடையு மொழுங்கும் சிறந்தனென விளங்கும். ஹிந்துநாரணியி னபிலாஷாஸ்பத மவலம்பித் தாங்கிதை வாங்குவரென்பது திண்ணம்.

கோமளம் காஞ்சியாத்திரை*.—"தாமரைப்பெண்" எழுதியது

இதை ஒருகதையெனக் கூறப்படாது. திருநாள் விளக்குஞ் சிறுபுத்தகமென்றுதான் சொல்லவேண்டும். தஞ்சையிலிருந்து கோமளம் தேவாதிராஜன் ஸேவையை காண்பான் காஞ்சிசென்று மற்றும் தன்னூர் மீண்டதைக் கூறுகின்றது. இதனுள் கிளைக்காதைகளும், பக்தியை விளக்கும் சிலபாகங்களுமுள்ளன ராமபாரதியார் துபன்னியாசமொன்றே இதனை கவனிக்கச்செய்யும். இந்திய விருத்தியைப்பற்றிக் கூறுஞ் சிலபாகங்களுமுள்ளன. பெண்பாலரிவ்வள வெழுதுவதரிது. பெண்களே பெண்கள் நடக்கவேண்டும் ஸரியான மார்க்கத்தைக்கூறுவது மிகவும் சிறந்தது. வைஷ்ணவரது நடைநொடிபாவனைகளை நன்றாகக்காட்டி ஸ்திரீகளது ஹ்ருதய ஸ்வபாவத்தைப் பிரகாசம் செய்கிறது. வைஷ்ணவரதுஉள்ளெண்ணத்தையுங் காட்டுகிறது. இப்புத்தகம் உயமான வைதிக வைஷ்ணவ வாழ்க்கையைக் குறிப்பிக்கிறது. இதை எல்லாரும் வாங்கி பெண்கல்வியை விருத்திசெய்ய தூண்டுகோலாக இருப்பரென்று நம்புகிறோம்.

*இப்புத்தகங்கள் "விவேக போதினி" ஆபீஸில் கிடைக்கும்

# விவேக போதினி

"எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்

தொகுதி 2 } ஸௌம்ய௵ புரட்டாசி௴ 1909-௵ செப்டம்பர்௴ { பகுதி 3

## ஆத்ம நஷ்டம்

### THE LOSS OF THE SOUL

'கலிகாலக்கொடுமை' எனப் பலர் கூறுவதை நாம் கேட்டிருக்கின்றோம். இதை அநேகர் அநேகவிதமாகப் பொருள் கொள்வர். சிலர் கலிகாலத்தில் ஸகல ஜாதி தர்மங்களும் நிலைகுலைய குழப்பம் உண்டாவதே இதன்பொருள் என்பர். வேறு சிலர் கலிகாலத்தில் ஜனங்களுக்கு பணத்தாசை அதிகரிக்க அதனால் பொருளீட்டலில் ஸன்மார்க்க ஒழுங்குகளைக் கவனியாமலே அவர்கள் நடக்க கஷ்டம் அதிகரிப்பதே இது என்பர். மற்றும் சிலர் இக்கலியில் வாசாஞானம் அதிகரிக்க மனிதர்களை மேல் நிலைக்குக் கொண்டுவருவதற்கு முதலில் பேருதவியாகவிருக்கும் கர்மம் பக்தி முதலியவற்றில் பழகுதல் குறைய விபரீதஞானம் அதிகரித்து பொதுவாக எல்லோருக்கும் கஷ்டமே உண்டாவது இது என்று எண்ணுவர். இவ்வாறு அநேகர் அநேகவிதமாக இந்த வாக்கியத்தைப் பொருள்படுத்தியபோதிலும் எல்லோரும் ஓர் பெரியகஷ்டம் கலியில் உண்டாகும் என்பதை ஒப்புக்கொள்கின்றனர். ஆனால் அதன் காரணத்தைக் கூறப்புகும்பொழுது மாத்திரம் இவர்களுள் பேதம் காணப்படுகின்றது. இவர் கூறும் காரணங்கள் பேதமாகக் காணப்பட்டபோதிலும், இவைகளுக்கு எல்லாம் மூலமாக இருக்கும் காரணத்தை எடுத்துக்கொண்டு நோக்கின் இவர்களுள் அதிக பேதமில்லை என்பது தெரியவரும்.

கலிகாலக்கொடுமையின் மூலகாரணம் யாது? முற்கூறியவைகள் எல்லாம் கலிகாலத்தில் இருந்தபோதிலும் அவைகள் எல்லாவற்றிற்கும் ஆத்மநஷ்டமே காரணம் எனத் தோற்றுகிறது. ஆத்மநஷ்டம் என்பதற்கு ஆத்மா என்ற ஓர் வஸ்துவின் சிறப்பால் தான் நமக்கு புத்தி முதலியன தொழிற்படுகின்றன என்ற உண்மையைக் கவனியாது ஆத்மா ஒன்று இருக்கின்றது என்பதை மறந்துவிற்றல். ஓர் கூட்டத்தில் நம்மோடுவந்த தோழன் ஒருவனை எவ்வாறு தவறவிட்டு விடுகின்றோமோ அவ்வாறே நாமும் இக்காலத்து நாகரீகத்தால் ஏற்படும் குழப்பத்தை நமது ஆத்மாவை மறந்துவிட்டோம். இதனால்தான் இக்காலத்தில் அதர்மங்கள் பொருளாசை, வாசாஞான முதலியன வெகு பிரமாதமாக வெளிக்காணுவது. ஆத்மா ஒன்றிருக்கிறது என்ற நம்பிக்கை ஒருவனுக்கு எவ்விதத்திலாவது திடமாக ஏற்பட்டிருக்குமாயின் அவனிடம் முற்கூறிய குற்றங்கள் இரா. இந்த நம்பிக்கை வந்தபின்பு ஆத்மரூபத்தை விசாரித்து அறியும் ஆவல் ஒருவனுக்கு உண்டாகும். இதனால் இவனுக்கு முடிவில் பேரின்பஸுகம் கிடைக்கும்.

ஆத்மா நஷ்டமாகித் தத்தளிக்கும் நமக்கு வெளியேற வழிஎன்ன? முற்காலத்தில்இந்தகஷ்டம் வராது தடுப்பதற்கு ஓர் ஏற்பாடு நமது மஹான்கள் செய்துள்ளார். விரதம், ஜபம், அனுஷ்டானம் முதலிய அதிக வ்யவஹார ஸம்பந்தமற்றவைகளை ஏற்படுத்தி, அவைகளில் நம்மை நமதுதொழில் முதலியவைகளிலிருந்து பிரித்து, தனிமையாக கொஞ்சகாலம் இருக்கும்படி செய்து, நமது மனது முதலியவைகளின் ஸ்வரூபம் நமக்கு தெரியவரும்படி செய்திருக்கின்றனர். இந்தப் பழக்கங்களால் மனது சுத்தமாக நஷ்டமான ஆத்மா காலக்கிரமத்தில் நமக்கு ஞாபகம்வந்துபின்னர் முத்திமார்க்கம் வெளியாகும். ஆகையால் அனுஷ்டானதிகளில் செலவிடவேண்டியகாலத்தை வீண்காலமெனக் கருதாது, அந்தக் காலங்களில் சிரத்தையோடு நமது வ்யவஹாரங்களிலிருந்து நீங்கி நமது மனதைப் பரிசுத்தப்படுத்திக்கொள்ள முயலுவோமாகில், நாளடைவில் ஆத்மதர்சனமாகி கலிகாலக்கொடுமையிலிருந்து நாம் விடுபடுவோம். இம்மாதிரி விடுபட்டு பேரின்பம் அனுபவிக்கும் மஹான்கள் கலிமுற்றிய இக்காலத்திலும் இல்லாமல் போகவில்லை. இதனால் நாம் தைரியம் அடைந்து நஷ்டமான ஆத்மாவைக்காண முயலவேண்டும்.

விவேக போதினி

தொகுதி 2] ஸௌம்ய ஞு புரட்டாசி மீ [பகுதி 3

## வேதாங்கங்கள்
### THE VEDANGAS

வேதங்களை அத்தியயனம் செய்யும் சிஷ்யனுக்கு அவற்றில் அடங்கியிருக்கும் பொருள் தெரிந்திருக்கவேண்டியது அவசியமாதலால், வேதங்களின் பொருளை விளக்குவதற்காக ஏற்பட்ட வேதாங்கங்களையும் அவன் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டும். இதன் பின்புதான் அவனுக்கு வேதங்களின் உட்பொருள் தெளிவாக விளங்கும். ஒவ்வொரு வேதத்திற்கும், ஸம்ஸ்கிருத பாஷையில் ஒருவாறு தேர்ச்சியடைந்தவருக்கு எளிதில் விளங்கும்படியான சிறந்த வியாக்யானம் எழுதப்பட்டிருக்கிறது. இப்படி இருந்தபோதிலும் இந்தப்பாஷ்யங்களை நன்ருக அறிந்து தெளிவதற்கு வேதாங்கங்களின் ஸஹாயம் அவசியமானது. வேதப்பொருள்களை விளக்கவந்த சாஸ்திரங்கள் ஆறு. அவையாவன:—சீக்ஷை அல்லது சப்தசாஸ்திரம், வியாகரணம் அல்லது இலக்கணம், சந்தஸ் அல்லது யாப்பியல், நிருக்தம் அல்லது சொல்லியல், ஜ்யோதிஷம் அல்லது வானசாஸ்திரம்; கல்பம் அல்லது மந்திரங்களை உபயோகிக்கும் வழியைச் சொல்லும் சாஸ்திரம் என்பவைகளே.

சீக்ஷை அல்லது சப்தசாஸ்திரம் என்பது எழுத்துக்களைப் பற்றியது. இது எழுத்துக்களின் மாத்திரை, உச்சரிப்பு, அளவு, ஸ்வரப் பொருத்தம் முதலியவைகளைப்பற்றி விவரிக்கின்றது. இதைக் கற்றுணர்ந்தால்தான் வேதவாக்கியங்களின் ஸ்வரம் ஒருவனுக்கு நன்ருகத் தெரியவரும். மோக்ஷமார்க்கத்தில் செல்லுவோர்க்கு வேதஸ்வரங்கள் இன்னவாறு ஸஹாயமாகின்றன என்பதை முன்னரே எடுத்துச் சொல்லியாய்விட்டது.

இரண்டாம் அங்கத்திற்கு வியாகரணம் என்றுபெயர். வேதங்களின் பொருளை உள்ளபடி அறிவதற்கு இந்த அங்கத்தை ஒருவன் தெரிந்துகொள்ளவேண்டும். சொற்களின் பொருளை அறிந்துகொள்ளுவதற்கு வியாகரணம் சிறந்த கருவி என்பது சிறுவர்களுக்குக்கூடத் தெரிந்தவிஷயந்தான். முற்காலத்தில் அநேக வியாகரணங்கள் இருந்தன. அவ்விலக்கணங்களின் ஸாரம் யாவும் இப்பொழுது வழங்கிவரும், பாணினியாற் செய்யப்பட்ட வியாகரணத்தில் அடங்கியுள்ளன. இந்தஇலக்கணத்தைவிட மனிதரால் ஒழுங்கான வேறு இலக்கணம் செய்யமுடியாது. இவ்விலக்கணம் அவ்வளவு சிறப்பு உடையது.

மூன்ருவது அங்கமாகிய சந்தஸ் என்பது வ்ருத்தங்களைப் பற்றிய சாஸ்திரம். கடவுளைத் தியானஞ்செய்பவருக்குத் தாம் ஒவ்வொரு காலங்களில் சொல்லவேண்டிய மந்திரங்கள் இன்ன வ்ருத்தத்தில் அமைந்துள்ளன என்றும், அவைகள் இன்ன தேவதைகளை நோக்கி ஏற்பட்டுள்ளன என்றும் தெரியவேண்டியது அவசியம். இஃது அவற்றைத் தெரிந்துகொள்ளுதற்கு முக்கியமானது. வ்ருத்தபேத முதலியவைகளைக் கவனியாது ஒருவன் வேதமந்திரங்களை உச்சரித்தால் அவனுக்குக் கொடிய பிராயச்சித்தங்களைச் சாஸ்திரங்கள் விதிக்கின்றன.

நிருக்தம் என்பது நான்காம் அங்கம். யஸ்கர் என்ற பெரியவையாகரணியொருவர் பதங்களின் அருமையைப்பற்றிய ஒரு சிறந்தநூல் செய்திருக்கிருர். வேதங்களின் ஸம்ஸ்கிருத நடைக்கும், இப்பொழுது வழங்கிவரும் ஸம்ஸ்கிருதநடைக்கும், பழைய தமிழ்நூல் நடைக்கும் இப்பொழுது வழங்கிவரும் தமிழ் நடைக்கும் எவ்வளவு வித்தியாஸம் உண்டோ அவ்வளவு வித்தியாஸம் உண்டு. வேதங்களில் அடிக்கடி வழங்கிவரும் சொற்களும், வாக்கி

யங்களும், தேவதைகளின் பெயர்களும், இப்பொழுது வழங்கிவரும் ஸம்ஸ்கிருத நடையிற் காணப்படவில்லை. யஸ்கர் என்பவர் ஒருவிதமான நிகண்டுவைச்செய்து அதில் வேதங்களிலுள்ள அரும்பதங்களுக்கு ஸம்ஸ்கிருதபாஷையில் தெளிவானபொருளையும், அபூர்வமாயும், முன் கேட்டிராததாயும் உள்ள சிற்சில வாக்கியங்கள் சொற்கள் இவைகளது இலக்கணத்தையும், ஸ்வரூபத்தையும், தேவதைகளின் பெயர்களது பொருளையும்,ஸ்வரூபத்தையும் நன்குவிளக்கியிருக்கிறார். இவைகளுக்கு ஏற்பவே நிருக்தம், (1) நைகந்துகம், (2) நைகமம்,(3) தைவதம் என்ற பெயர்களையுடைய மூன்று அத்தியாயங்களாகப் பகுக்கப்பட்டிருக்கிறது. முதலத்தியாயமாகிய நைகந்துகம் என்பது, அமரஸிம்மன், ஹலாயுதர் முதலியவர்களாற் செய்யப்பட்ட சுலோகரூபமானநிகண்டுகளைப்போன்றது. இது மூன்று உட்பிரிவுகளை உடையது. இரண்டாவது அத்தியாயமாகிய நைகமத்திற்கு உட்பிரிவுகள் இல்லை. இதில் வேதத்தில் வழங்கிவரும் சாந்தஸபதங்களது இலக்கணமும்,ஸ்வரூபமும் காணப்படும். இறுதி அத்தியாயமாகிய தைவதத்திலும் உட்பிரிவுகள் இல்லை. இந்தப் பாகத்தில் வேதங்களிற் கூறப்படும் தேவதைகளின் பெயர்களது பொருள் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. தாம்செய்த இந்தச் சிறந்தநிகண்டுவுக்கு யஸ்கர் தாமே 12-அத்தியாயங்களை உடைய ஒரு வியாக்யானத்தையும் செய்திருக்கிறார். இதற்கும் நிருக்தம் என்ற பெயரே வழங்கிவருகிறது.

ஐந்தாவது அங்கம் ஜ்யோதிஷம் அல்லது வானசாஸ்திரம் என்பதே.வேதங்களில் விதிக்கப்பட்டிருக்கும் கர்மம்முதலியவைகளை நடத்துவதற்குத்தகுந்த நாள்களைத் தீர்மானம் செய்வதற்கு இந்த அங்கம் ஒருவனுக்குஅவசியம் தெரிந்திருக்கவேண்டியது. ஆரியர்களுக்கு வெகுநாளாக நக்ஷத்திரங்கள், கிரஹங்கள் ஆகிய இவைகளின் போக்குவரவுகளாற் சிற்சில கர்மங்கள் சீக்கிரம் பலிக்கும் என்ற நம்பிக்கை உண்டு. இதனால் மேனாட்டவர்போல் தேதிக்கணக்கின்படி கர்மங்களைச்செய்துவராமல் நக்ஷத்திர கிரஹநிலைகளின்படியே செய்யவேண்டிய கர்மங்களை நடத்திவந்தார்கள். இவ்வழக்கமே மேனாட்டவரது வழக்கத்தைவிடச் சிறந்தது என்பதற்குச் சந்தேகமில்லை.

கல்பம் என்பது இறுதி அங்கம். இதில் கர்மங்கள் நடத்தவேண்டிய கிரமம் இன்னதென்பதும், இன்ன இன்ன கர்மங்களில் இன்ன இன்ன மந்திரங்கள் உபயோகிக்கவேண்டுமென்பதும், அவைகளை உச்சரிக்குங்கால் நாம் செய்யவேண்டிய காரியங்கள் இவை யென்பதும் கூறப்பட்டிருக்கின்றன. கல்ப ஸூத்திரங்கள் ஆசுவலாயனர், ஸாங்கயனர், போதாயனர், த்ராஹ்யாயனர் முதலான அநேக ரிஷிகளால் செய்யப்பட்டுள்ளன.

முன் எடுத்துக்கூறிய ஆறு வேதாங்கங்களன்றியும் வேத ரஹஸ்யத்தை வெளியிடவந்த கிரந்தங்கள் வேறு நான்கு உண்டு. அவையாவன, புராணங்கள், நியாயம், மீமாம்ஸம், தர்மசாஸ்திரம் என்பவைகளே. நான்கு வேதங்கள், ஆறு வேதாங்கங்கள், புராணாதி நான்கு ஸஹாய சாஸ்திரங்கள் ஆகிய பதினான்கும் சதுர்தச வித்தைகள் எனப்படும். இவற்றை ஒவ்வொரு த்விஜனும் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டும். இவைகளிலேதான் ஸகல தர்மங்களும், ஞானங்களும் அடங்கியிருக்கின்றன. ஆகையால் இவற்றைக் கற்றவனுக்கு உண்மைப்பொருளை உணரும்சக்தி உண்டாகிறது.

இந்தப் பதினான்கு சாஸ்திரங்களையும் த்விஜன் படித்து உணரவேண்டும் என்பதை நமது சாஸ்திரங்கள் ஒரு விதியாகச் சொல்லுகின்றன. இப்படி ஒருவன் நடக்காதிருந்தால் அவனுக்கு மோக்ஷமார்க்கத்தில் மிகுந்த ஆபத்துக்கள் உண்டாகும். சாஸ்திரங்கள், வேதங்களைப் படித்தே தீரவேண்டும் என்று வற்புறுத்துவதற்குக் காரணம் சற்று யோசித்துப்பார்ப்போரு

க்கு ஒருவாறு விளங்கும். நமது வாழ்நாளோ அளவிற்குறைந்தது. நாம் இதற்குள் தொடர்ச்சியாக அனுபவிக்க எண்ணும் சிற்றின்பங்களோ அநித்யம். உள்ளத்துறவோடும், மனோநிரோதத்தோடும் நாம் காலங்கழித்துவரின் அதனால் பிற்காலம் நாம் அடையும் பேரின்பமோ மிகச்சிறந்தது. ஆகையால் நாம் இந்தஉலகத்தில் உயிரோடு வாழும்வரையில் பின்னர் வரும் மேலானபதவிக்கே பாடுபடவேண்டுமென்பது அவசியந்தானே. நமது உலக இன்பங்களையும் பொருளாக மதியாமல் நாம் இந்த மேலான நிலைக்கு அனுகூலமாக நமது மனத்தைத் திருப்பிக் கொள்ளவேண்டும். இம்மாதிரி நாம் உலக இன்பங்களை ஒருவாறு ஒழுங்குபடுத்தி ஜாக்கிரதையோடு அனுபவித்தால் அவைகள் நமது மோக்ஷமார்க்கத்தில் தடையாகமாட்டா. அவைகள் ஆரம்பகாலத்தில் ஒருவேளை நமக்கு ஸஹாயமாயிருந்தாலும் இருக்கும். அதனால் "இவைகள் இவ்வாறு ஸஹாயமாகின்றனவே இவைகள் மோக்ஷத்தை அடைவதற்கு அதிக அவசியமானவை" என்று மாத்திரம் எண்ணிவிடல் கூடாது. அவ்வாறு எண்ணினால்நாம் சிற்றின்பங்களில் நம்மைஅறியாது சிக்கிக்கொண்டு நற்கதி அடைய வழியில்லாது தத்தளிப்போம். ஆகையால் உலகஇன்பங்களைநாம்ஆரம்பகாலத்தில்மட்டும் அவை நமக்கு மோக்ஷமார்க்கத்துக்குச்சிறிது ஸஹாயம்செய்வனவாகக் கருதலாம். இவ்வாறு கருதி ஜாக்கிரதையோடு உலகில் வாழும் த்விஜர்களது சொல்லும், வேதசாஸ்திரஞானங்களும், மோக்ஷமார்க்கத்துக்கு எக்காலத்திலும் பேருதவியாகவிருக்கும். இதுபற்றியே எல்லா த்விஜர்களும் 14-சாஸ்திரங்களையும் படித்து உண்மை உணரவேண்டியது அவசியமென்று நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன.

## நமது நோன்புகள்
## OUR OBSERVANCES



### II. கோகுலாஷ்டமி அல்லது கிருஷ்ணஜயந்தி
### THE BIRTH OF KRISHNA

இந்த நோன்பு ஒவ்வொரு வருஷத்திலும் ஆவணி மாதம் கிருஷ்ணபக்ஷ அஷ்டமி திதியன்று வருவது. இந்த நோன்பின் காலத்தைக் குறிப்பதற்கு 'அவிட்டம் கழித்த எட்டாம்நாள்' என்ற வசனமும் வழங்கிவருகின்றது. அதாவது ஆவணி அவிட்டம் என்ற பிராம்மணர்களுள் சிறப்பாகக் கொண்டாடப்படும் வேதாரம்ப ஹேதுவானநோன்பு ஆவணிமாதம் பௌர்ணமியில் ஸாதாரணமாக வருவது வழக்கம். அது வரும் நாளுக்கு எட்டுநாள் பின்னர் இந்த நோன்புவரும் என்பது முற்கூறியுள்ள வசனத்திற்குப் பொருள். இது வைஷ்ணவருள் ஓர் நாளிலும் மற்றையப் பிராம்மணர்களால் இதற்குமுந்தின நாளிலும் ஸாதாரணமாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. வைஷ்ணவர்களுக்கு ரோஹிணீ நக்ஷத்திரம் பிரதானமாதலாலும், மற்றையவர்களுக்கு அஷ்டமீ திதி பிரதானமாகையாலும் இந்த நோன்பு இவ்வாறு இரண்டுபட்டு வருகின்றது.

இந்த நோன்பு ஸாதாரணமாக நம்முள் இவ்வாறு கொண்டாடப்பட்டு வருகின்றது என்பதை விவரிப்போம். இந்த நோன்பன்று அதிகாலையில் வீட்டிலிருப்போர் எல்லோரும் ஸ்நானம் முதலியவைகள் செய்துவிட்டு தமது நித்யகர்மங்களை முடித்துக்கொண்டு அவரவர்கள் அன்று ஸாயங்காலம் நடந்தேறவேண்டிய கிருஷ்ணன் பூஜைக்கு வேண்டிய ஸஹாயவிஷயங்களை தம்மால் கூடியவரையில் தயார்செய்வார்கள். வீட்டிலிருக்கும் சிறுவர்கள் ஊரிலுள்ள தோட்டங்களில் எல்லாம் அலைந்து பகவத்பூஜைக்கு வேண்டிய பத்திர புஷ்பாதிகளை சேகரித்துவரும் கைங்கரியத்தில் இறங்கிவிடுவார்கள். வீட்டில் உள்ள பெண்டுகள் எல்லோரும் அவர்கள் நிலைக்குத் தகுந்தபடி பகவான் நிவேதனத்திற்கு வேண்டிய பக்ஷணம் முதலியவைகள் செய்வதில் தமது காலத்தைக் கழிப்பார்கள். வயதில் முதிர்ந்தவர்கள் பாகவதம்முதலியதிவ்யகதைகளை வாசித்தல்கிருஷ்ண பரமாத்மா முதலிய பெரியோர்களால் செய்யப்பட்டுள்ள அரியநூல்கள் முதலியவற்றை வாசித்தல் ஆகிய ஸத்காலக்ஷேபங்களை செய்துவருவார்கள். அன்று ஸாயங்காலம் பூஜைநடக்கும் வரையில் பட்டினி இருக்க சக்தியுடையவர்கள் சுத்தபட்டினியாயும், குழந்தை முதலானவர்கள் தவிர மற்றையோர் சிற்றுண்டி உட்கொண்டும் இருப்பார்கள். ஸாயங்கால ஸமயம் வந்ததும் வீட்டில் பெரியவராக இருப்பவர் ஸ்நாநம் முதலியனசெய்து தயாராக இருக்கும் பூஜாத்ரவ்யங்கள் முதலியவைகளைக்கொண்டு கிருஷ்ணன் பூஜைசெய்யத் தொடங்கி நிவேதனம் முதலியவைகள் செய்துமுடிப்பார். பகவத் பிரஸாதத்தை வீட்டில் உள்ளோர் எல்லோரும் உட்கொண்டபின்னர் பாகவதத்தில் கிருஷ்ணஜனனம் வாசித்தல் இதுபோன்றவேறு சில ஸத்காலக்ஷேமாதிகளைச் செய்துகொண்டே அன்றிரவு சந்திரோதயம் ஆகும்வரை விழித்திருப்பார்கள். சந்திரோதயம் ஆனதும் கிருஷ்ண பரமாத்மாவுக்கு கற்பூர ஹாரத்தி முதலியன செய்துவிட்டு எல்லோரும் தூங்கத் தொடங்குவர். மாத்வபிராம்மணர்களுள்மாத்திரம் அன்றிரவு ஏகாதசியைப்போல பட்டினியாகவே இருந்துவிட்டு மறுநாள் காலையில் துவாதசியன்று செய்வதுபோலப் பாரணைசெய்வது வழக்கமாக இருக்கிறது.

விஷ்ணு ஆலயங்களில் கிருஷ்ணஜயந்தி யன்றையதினம் பகவானுக்கு விசேஷமாக அபிஷேகம் பூஜை முதலியன முடிந்தபின்னர், அன்று ஸாயங்காலம் ஸ்வாமி வீதி சுற்றிவரப் புறப்படும். கிருஷ்ண பரமாத்மா காளிங்க ஸர்ப்பத்தின்மீது நர்த்தனம் செய்வது போன்ற அலங்காரம் அன்று ஸ்வாமிக்குச் செய்திருக்கும். கிருஷ்ண பரமாத்மாவின் லீலைக்குள் இதுவே மிகுந்த அற்புதமானதாயும், சிறந்த உட்கருத்துகள் அமைந்ததாயும் உள்ள லீலை ஆதலால் எங்கும் இந்த அலங்காரமே பொதுவாகக் காணப்படும். உட்பொருள் முதலியவற்றை இந்த வியாஸத்தின் முடிவில் விவரிப்போம். பகவான் புறப்பட்டு வெளி வந்ததும் ஸந்நிதியில் சறுக்குமரம் ஒன்று நாட்டியிருக்கும். அதன் நுனியில் ஓர்முடிப்பில் கொஞ்சம் காசு வைத்து முடிந்திருக்கும். பகவானுடன் கோகுலத்தில் விளையாடியவர்கள் யாதவர்களாதலால் அந்த குலத்திற்கு ஈடாக இக்காலத்திலிருக்கும் இடையர் குலத்தோர் இச்சறுக்குமரத்தில் ஏறி, மேல் இருக்கும் காசை எடுக்கமுயலுவர். அப்பொழுது அவர்கள் அருகில் உயர்ந்த ஸ்தானத்தில் மஞ்சள் நீர் முதலியவைகளோடு தயாராக இருப்பவர் சிலர் ஜலத்தை ஓயாது அவர்கள்மேல் அடித்துக்கொண்டே யிருப்பார்கள். இவைகளை எல்லாம் கவனியாது, சாண்ஏறினால் முழம் சறுக்கும். சறுக்குமரத்தின் கஷ்டத்தையும் கவனியாது, 'பகவான்கோகுலத்தில் தமது குலத்தவருடன் செய்தலீலைகளுள் ஒன்றைத்தாமும்பகவான்மேல்கருத்துவைத்து எந்தக் கஷ்டத்தையும் கவனியாது நடத்தவேண்டு'மென்ற ஆவலுடன் இடையன் ஒருவன் மிகுந்த கஷ்டத்தின்மேல் கம்பத்தின் உச்சிபோய் அங்கிருக்கும் முடிப்பை எடுத்துவருவன். முடிவில் அவன் கம்பத்தின் அடியில்வந்து எதிரிலிருக்கும் பரமாத்மாவை நோக்கி மனதார செய்யும் வழிபாட்டை நோக்குங்கால் 'மோக்ஷமார்க்கத்தில் சாண் ஏற முழம் இழுக்கும்படியான உலகவாழ்விலிருந்து கொண்டு உறுதியுடன் மோக்ஷமார்க்கத்தில் நிலைபெற்று ஆத்மலாபத்தை அடைவது மிகக்கஷ்டம்! அதை அடைவதே நமது வாழ்க்கைப்பலன்" என்ற எண்ணம் உற்றுநோக்குவோர் எவர் மனதில் தான் உதியாது? இதுபோலவே வீதியில் உரிகள் கட்டப்பட்டிருக்கும். அவைகளைக் கப்பிகள் மூலமாக மேலும் கீழுமாக இழுக்கும்படி வைத்திருக்கும். இடையர்களுள் ஒருவன் இந்த உரியை தன் கையிலிருக்கும் தடியால் அடிக்க முயலுவான். அந்த ஸமயத்தில் உரி அவன் தடிக்கு எட்டாதபடிவேறொருவன் இழுத்துவிடுவான். அருகாமையிலிருந்துகொண்டு சிலர் உரியடிப்பவன் மீது தண்ணீரை அவன் முகத்தில் படும்படி அடித்துக் கொண்டிருப்பார்கள். இந்தத் தடைகளைக் கவனியாது அவன் உரியை அடித்ததும் ஸ்வாமி வீதிவழியாக

வந்து எல்லோருக்கும் காட்சிகொடுத்துக்கொண்டே வரும். ஆங்காங்கு ஏற்படுத்தப்பட்டிருக்கும் உரிகளின் அருகாமையில், உரி அடிபடும் வரையில் நின்று பின்னர் ஸ்வாமி அப்பால் போகும். இம்மாதிரி சிறந்த உட்கருத்துக்கள் உள்ளடங்கிய உத்ஸவம் ஒன்று கிருஷ்ணஜயந்தி யன்று நடந்துவருகின்றது.

இந்தநோன்பிற்குக் காரணமாக இருக்கும் புராணகதையை எடுத்து விவரிப்போம். உலகத்தில் கம்ஸஜராஸந்த ரூபமாக அஸுரர்கள் எல்லோரும் ஜன்மமெடுத்து அநீதியிலேயே ஸதா முயற்சியுடையவர்களாகி பூமிக்குப் பெரும்பாரமாக இருந்தகாலத்தில், பூமிதேவி காமதேனு உருக்கொண்டு பிரம்மதேவரிடம் சென்று தனது கஷ்டத்தைக் கூறி முறையிட்டுக்கொண்டாள். அப்பொழுது பிரம்மதேவர் ஸகல தேவதைகளாலும் சூழப்பட்டு பூமிதேவியோடு பரம்பொருள் யோக நித்திரைசெய்யும் திருப்பாற்கடலடைந்து துதிக்க, அவர் ஸகல தேவதைகளையும் பூமியில் ஜன்மங்கள் எடுக்கும்படி உத்தரவுசெய்து தாமும் கூடியசீக்கிரத்தில் வஸுதேவருக்குப் பிள்ளையாகப்பிறந்து தேவதைகளுக்கு ஹிதம் செய்வதாக ஒப்புக்கொண்டார்.

இப்படி இருக்கையில் ஸூரராஜா வம்சத்தில் பிறந்த வஸுதேவர் மதுரைதேசத்து அரசனாகிய உக்கிரஸேனராஜன் பெண்ணாகிய தேவகி தேவியை கல்யாணம் செய்துகொண்டு, மறுநாள் அவளைத் தமது தகப்பன் வீட்டிற்கு அழைத்துப்போக யத்தனித்தார் அப்பொழுது தேவகி தேவி தகப்பன் தனது வாஞ்சையால் தன் பெண்ணுக்கு அநேகவித ஸ்திரீதனங்கள் கொடுத்தான். அப்பொழுது ஊருக்குப்போக வஸுதேவரும் தேவகியும் தேர்மேல் வந்து ஏறினார்கள். தேவகீதேவியை திருப்திசெய்வதற்காக அவள் தம்பி கம்ஸன் தேர் ஓட்டவந்து ஏறிக்கொண்டான். இவன் உத்ஸாஹமாகத் தேர் ஓட்டிச் செல்லும்பொழுது ஆகாயத்தில் அவன்முன்பாக 'அடே மடையா! இந்த ஸ்திரீயின் எட்டாவது குழந்தை உனக்கு யமன்' என்று ஓர் அசரீரிவாக்கு உண்டாயிற்று, இயற்கையாகவே கொடியவனான கம்ஸனுக்கு கோபம் உண்டாக தனது பட்டாக்கத்தியை உருவிக்கொண்டு தேவகீதேவியை ஒரேவீச்சாய் வீசிவிடவேண்டும் என்று எண்ணிக்கொண்டு அவள் தலைமயிரை பிடித்துவிட்டான். வஸுதேவர் தர்மவழியில் அவனை ஸமாதானம்செய்யப் பார்த்தார். முடியாமல்போக வஸுதேவர் தனக்குப்பிறக்கும் பிள்ளைகள் எல்லாவற்றையும் கம்ஸன் வசம் ஒப்புவிப்பதாக ஒப்புக்கொண்டார் கம்ஸன் கொலைத்தொழிலை நிறுத்திவிட்டான்.

தனக்குப் பிறக்கும்பிள்ளைகளை முறையேவஸுதேவர் கம்ஸனுக்குத் தவறாது கொடுத்துவந்தார். வஸுதேவரது நடத்தைக்குமெச்சி கம்ஸன் குழந்தைகளை வஸுதேவரிடமே கொடுத்துவிட்டான். இம்மாதிரி நல்லபுத்தி அவனுக்கு வந்தது மிகவும் அபூர்வம். இவன் சீக்கிரம் இறந்தால் அல்லவா உலகத்திற்கு க்ஷேமம்? இவன் இவ்வாறு சற்று நல்லவனாகிவிட்டால் இவனுக்குக் கடவுள் தண்டனை எப்படிவரும்? இதை ஸரிப்படுத்தி கம்ஸனை மிகக் கொடியவனாக்குவதற்கும், வஸுதேவருக்குப் பிள்ளைகளாகப் பிறந்திருக்கும் தேவதைகளை சீக்கிரத்தில் விடுவிப்பதற்கும் நாரதர் அங்கு வந்துவிட்டார். உலகத்தில் கொடியவர்களை வேரறுக்க தேவதைகளும் மஹாவிஷ்ணுவும் செய்திருக்கும் ஏற்பாட்டை அவனுக்குக்கூற கம்ஸனுக்கு பயம் அதிகரித்துவிட்டது. வஸுதேவரையும் தேவகியையும் ஆருவது குழந்தை பிறந்ததும் அவன் சிறையில் இட்டான். ஆறு குழந்தைகளையும் வாங்கி அவன் இரக்கமின்றிக் கொலையும் செய்துவிட்டான்.

தேவகி ஏழாவது கர்ப்பமானாள். அப்பொழுது மஹாவிஷ்ணு தமது யோகமாயையை அழைத்து 'வஸுதேவரது பத்னிகள் கம்ஸனுக்கு பயந்து நந்தகோபரது ராஜ்யத்தில் ஒளிந்துகொண்டிருக்கிறார்கள். அவர்களுள் ரோஹிணீதேவி வயிற்றில் இந்த ஏழாம்குழந்தையை வைத்துவிடு. நான் பின்னர் தேவகீவயிற்றில் பிறக்கிறேன். நீ நந்தகோபரது மனைவியாகிய யசோதைவயிற்றில் பெண்ணாகப் பிறந்துவிடு' என்று ஆஞ்ஞாபித்தார். எல்லாம் இவ்வாறேயாக, தேவகீகர்ப்பம் நஷ்டமாய்விட்டது. இதன்பின்பு வஸுதேவரிடம் பகவான் புகுந்துகொண்டு காலக்கிரமத்தில் தேவகீயினிடம் பிரவேசித்தார். தேவகீ எட்டாம் தரம் கர்ப்பம் தரித்தாள். ஏழாம் கர்ப்பம் மாயமாக மறைந்துபோய்விட்டதையும் தேவகீ எட்டாம்தரம் கர்ப்பந்தரித்து விளங்குவதையும் கேட்ட கம்ஸனுக்கு ஏதோ இவைகளில் சூது இருக்கிறது என்று தோன்ற பயம் அதிகரித்துவிட்டது. அநேகரைக் காவலாக ஏற்படுத்தினான். எங்கே ஏழாவது கர்ப்பம்போல இதுவும் மாயமாக மறைந்து கொஞ்ச நாளில் தனக்கு யமனாக வந்துவிடுமோ என்ற பயத்தால் குழந்தை பிறந்ததும் தனக்குத் தெரிவிக்கும்படி கடுமையான கட்டளையிட்டிருந்தான். பகவானைத்

தன்னிடம் தங்கியிருக்கும் தேவகீ தேவியைக் கண்டதும் அவனுக்கு அவளைக்கொல்ல மனம்வரவில்லை. பகவானது ஜனனத்தை மிகுந்த பரபரப்புடன் கம்ஸன் எதிர்பார்த்திருந்தான். தேவதைகள் எல்லோரும் பகவானைத் துதித்து அவர் அவதாரத்தை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர்.

அஷ்டமி இரவு சந்திரோதயகாலம்: நிசி 12-மணி ஸுமார் இருக்கும். கம்ஸன் மிகுந்த பயத்துடன் தன்னைச்சுற்றி பகவான் காணப்படுவதாக எண்ணி எண்ணி வெருண்டு அடிக்கடி விழித்துப் பார்த்துக்கொண்டு சற்றுக் கண் அயர்ந்தான். கண்கொட்டாது காவலாக இருந்த சிறைச்சாலை வாயிற்காப்போர் எல்லோரும் களைப்பால் சற்றுக் கண் அயர்ந்தனர்.

இப்படி இருக்கையில் சந்திரன் உதயமானான். அத்துடன் சிறைச்சாலையில் பகவானும் வெளிவந்தார். ஸாதாரணக் குழந்தைகள்போலா? சதுர் புஜத்தோடு தமக்கு ஸாதாரணமாக உள்ள திவ்ய மங்களரூபத்துடன் வஸுதேவர் தேவகீ இருவருக்கும் தோன்றினார். இருவரும் வாயாரப் பகவானைத் துதித்து ஆலிங்கனம் செய்துகொண்டனர். உடனே அவர்கள் காலில் இட்டிருந்த விலங்குகள் யாவும் சிதறிப்போயின. காலதாமதம் செய்யாது பகவான் அவர்களை நோக்கி 'நான் சீக்கிரத்தில் குழந்தையாகிவிடுவேன். என்னை எடுத்துச்சென்று யமுனையாறு கடந்து அக்கரையிலிருக்கும் நந்தகோப கிரஹத்தில் சென்று பிரஸவித்திருக்கும் யசோதையருகில் விட்டுவிட்டு அங்கிருக்கும் பெண்சிசுவை இங்கு எடுத்துவந்துவிடுங்கள். நீங்கள் செய்யும் காரியம் ஒருவருக்கும் தெரியாதிருக்கும். கதவு, ஆறு முதலியனதாமே உமக்கு அனுகூலமாக இருக்கும்' எனச் சொல்லிக் குழந்தையானார்.

வஸுதேவர் தேவகீயைத் தேற்றிவிட்டு காலதாமதம் செய்யாது கதவைத் தொட்டார். கதவு திறந்தது. வெளியே வந்தார், காவலாளர்கள் முதலியோர் உறங்குவதைக் கண்டார். பகவானது திருவிளையாடலைக் கண்டு வியந்தார். அப்பொழுது மழைத்தூற்றல் விழுந்துகொண்டிருந்தன. யமுனை வந்து அங்கு ஏற்பட்ட வழி மூலமாக நந்தகோபர் வீடுசென்று எல்லோரும் தூங்கிக்கொண்டிருந்ததால் ஒருவருக்கும் தெரியாது தமது குழந்தையை விட்டுவிட்டு யோகமாயையை எடுத்துக்கொண்டு தமது சிறைச்சாலை வந்தார். கதவுகள் சாத்தியவுடன் முன்போல பூட்டிக்கொண்டன. விலங்குகள் காலில் வைக்கப்பட்ட உடன் முன்போல சேர்ந்துகொண்டன. அந்த ஸமயத்தில் நிச்சப்தமான இரவில் ஓர்கழுதை கத்தியதாம். பெண்சிசுவும் கத்தியதாம். திடுக்கிட்டு எல்லோரும், எழுந்து தேவகீ தேவிக்குப் பெண்பிறந்த விஷயத்தைக் கம்ஸனுக்குத் தெரிவித்தனர். பின்பு கம்ஸன்செய்த விஷயங்களை நாம் இங்கு விவரிக்கவேண்டியது அனாவசியம்.

இவ்வாறு தோன்றிய பரமாத்மா தமது வாழ்நாள் முழுவதையும் வாழ்க்கையின் நோக்கம், ஸம்ஸாரத்திலிருந்து மனிதன் விடுபடும்விதம், உலகவிஷயங்களின் ஸ்வரூபம் ஆகிய இவைகளையே. அநேகவிதமாக ஓயாது நம்போலியருக்கு நேராகவும் தமது நடத்தைகள் மூலமாகவும் போதித்துக்கொண்டேயிருந்தார். இவரை உள்ளபடி உணர்வது மிகக்கஷ்டம். இவர் செய்துள்ள லீலைமுதலியவைகள் அநேகவிதமாகவும் அநேக விரோத அம்சங்களை உடையனபோலவும் மேலெழுந்தவாரியாகப் பார்ப்போருக்குத் தோன்றும். உற்று நோக்குவோருக்கு மாத்திரமே இவர் முற்கூறிய அரிய விஷயங்களைத் தமது வாழ்க்கையில் காட்டுவது நன்குவிளங்கும். ஓர் மஹான் கிருஷ்ணபரமாத்மாவின் வைபவங்களைப் பின்வருமாறு எடுத்துக்கூறியுள்ளார். 'பிரபஞ்சமாகிய நாடகத்தில் இருக்கும், வெளிப் படையானவிரோதாம்சங்கள், தோஷங்கள் முதலியவற்றையும் விடாது நடித்து யாரும்மறவாதவண்ணம்காட்டி, அவைகளின் பின் தாமே கபடநாடக ஸூத்ரதாரியாக விருப்பதை வெளிப்படுத்தியவராயும், தாமே தஸ்கராணாம் பதியாக (கள்வர் தலைவனாக) இருப்பவராயும், பிரேமை கருணை முதலியவைகளுக்கு நிலையமாக விருந்தபோதிலும் தாமே ஸகல விரோதம் சண்டை முதலியவைகளுக்கு இவ்வாறு காரணமாக இருப்பது என்பதை வெளியிடுபவராயும், ஸகலவேதாந்தங்களையும் வெளிப்படுத்தும் திறனுடையவராயும் ஸகலஸ்திரீகளும் மிகுந்த ஆனந்தத்துடன் கூறத்தக்கதாயும் உள்ள பால்யலீலைகளை உடைய அற்புதக் குழந்தையாயும், உபநிஷத்துகள் வெளியிடும் அற்புதவிஷயங்களைவிட. அத்யற்புத விஷயங்களைத் தெரிவிக்கும் சேஷ்டைகளை கோபிகள், ராதை முதலியவர்களோடு செய்த அற்புத புருஷனும், உலகத்தையே நிலைநிறுத்தும்படியான சட்டங்களைவெளிப்படுத்திய அமைச்சராயும், ஸந்நிதான மாத்திரத்தில் எல்லா விஷயங்களை நியாயப்படி நடக்கும்படி செய்யும் அற்புத வீரராயும், உலகத்தில் உள்ள ஸகல

வேதங்களது ஸாரத்தையும் சுருக்கமாக கொஞ்ச நாழிகையில் எடுத்துரைத்த பரம குருவாகியும், 60,000 ஸ்திரீகளோடு கூடியிருக்கும் நித்ய பிரம்மசாரியாயும், நாரதரை ஒரு நொடிப்பொழுதில் மாயையில் கட்டுப்பட்டுத் தவிக்கும்படி செய்த தந்திரமான ஸ்நேஹிதராயும், ஸதா வேணுகானம், நடனம், விளையாட்டு ஆகிய இவைகளையே நிச்சிந்தையாக செய்துகொண்டிருக்கும் கோபாலனையும், சற்பனரஸம், ஸம்பவவிசித்திரங்கள், ஆழ்ந்த உட்கருத்துக்கள் ஆகிய இவைகள் விஷயத்தில் தனக்குத்தானே நிகர் என்று சொல்லும்படியான திவ்ய சரித்திரத்தை உடையவராயும், பூர்ணவதாரமாயும் உள்ள கிருஷ்ண பரமாத்மாவை கடவுளெனக் கருதித் துதிக்காது இருப்பவரும் உண்டோ !'' என்று வியந்து கூறியுள்ளார்.

இவ்வளவு சிறப்புடைய பகவத்கதையைக் கேட்டால் நமது மனதிற்கு என்ன தோற்றும். 'பெரியோர்களது சரிதங்கள் நாமும் பெரியோராகி நமது பின்வருவோருக்கு ஓர் ஆதாரமாக விருநது அவர்களை சிறந்தவராகத் தூண்டும் திறனுடையவர்கள் ஆகலாம் என்ற எண்ணத்தை நமக்கு உண்டாக்கும்' என்றார் ஓர் ஆங்கிலகவி. இது மனிதரது சரித்திரத்தைப்பற்றிச் சொன்னது. இதை கிருஷ்ண பரமாத்மாவின் சரித்திரத்தோடு சேர்த்தால் பொருந்தாது. கிருஷ்ண பரமாத்மாவைப்போல நடக்க முயன்றோமாகில், நம்மால் ஒன்றும் செய்யமுடியாது என்பதோடுகூட நாம் வீணாகக் கெட்டுப்போய் ஒரு விஷயத்திற்கும் பயன்படாமல் போய்விடுவோம். ஆகவே இவரது சரித்திரத்தை நோக்கில் முன்னர் கூறியுள்ள மஹான் சொல்லுவது போல், உலக விஷயங்களில் விருப்பு வெறுப்புமுதலியவைகள் இன்றி பகவானது லீலா விபூதிகளில் ஈடுபட்டு பிரபஞ்சத்தையே மறந்து கொஞ்சகாலம் நிற்கும்படியான சக்தியை இவரது சரித்திரம் கொடுக்கின்றது என்பது தெரியவரும். இதுவே கிருஷ்ண பரமாத்மாவைப் போன்ற அவதார சரித்திரங்களால் நமக்கு ஏற்படும் நன்மை. இவைகள் ஸாதாரண பெரியோர்களது சரித்திரத்தைப்போல முற்றிலும் நாம் பின்பற்றக்கூடும் சரித்திரங்கள் அல்ல என்பதை அறிந்து இச்சரித்திரங்களைக் கண்டு வியந்து கடவுளது அவதாரதினங்களைக் கொண்டாடுவோமாகில் நாம் மேன்மை அடைவோம் என்பதற்கு ஐயமில்லை.

இனிமேல் கிருஷ்ணஜயந்தி விஷயமாக உள்ளபுராணகதையில் அடங்கி இருக்கும் உட்கருத்துகளை எடுத்துக்காட்டுவோம். எப்பொழுதும் நிஷ்டை பழகிக்கொண்டு ஸதா பரம்பொருளோடு வாஸம்செய்யும் மனம்உடைய ஞானிக்கு இதுவரையிலும் கூறியவை திருப்திகரமாக இருக்கமாட்டா. அவனுக்கு எல்லா விஷயத்தையும் ஆத்மபரமாக ஸமர்வயப் படுத்திக்கொள்ளவேண்டிய ஆவலே இருக்கும். ஆகவே அவன் உக்ரஸேனனை கோபாதிவிருத்திகளுக்கு அதிபதி என்றும், கம்ஸனை ஜீவ அகங்காரமென்றும், அவன் தங்கை தேவகியை புத்தி என்றும், அவள் ஏழுபிள்ளைகளை சுத்தபுத்தி விருத்திகள் என்றும் கம்ஸன் அப்பிள்ளைகளைக் கொல்லுவதை அகங்காரம் சுத்த புத்தி விருத்திகளை அடக்கிவிடுவது என்றும், கிருஷ்ணபரமாத்மாவை ஞானம் என்றும், பரமாத்மா உண்டானதும் விலங்கு தரித்துப்போனது, சிறைச்சாலைக் கதவுகள் திறந்தது ஆகிய இவைகளை ஞானனுபவத்தால் பாசம் கழன்றுபோவது என்றும், கொண்டு கிருஷ்ணஜயந்தியன்று அவனும் ஆனந்திப்பான் இப்பொருள்கொண்டு ஆனந்திக்கும் ஞானிக்கு கண்டவிடமெல்லாம் ஸதா பகவான் இருப்பதாகவும் அஞ்ஞானிகளாகிய நம்மிடம் சிற்சில ஸமயங்களில் கிருஷ்ணன் தோன்றுவதாகவும் காணப்படும். உதாரணமாக ஏதாவது ஓர் வீட்டில் துக்கம் இருப்பதையும் அங்கு யாராவது ஒருவர் வந்து நல்ல விஷயங்களைக் கூறி தேற்ற வீட்டோர் தேறி இருப்பதையும் கண்டவுடன் அங்கு பாலகிருஷ்ணன் பிறந்ததாக எண்ணி அவன் மகிழுவான்.

இந்த நோன்பன்றையதினம் கிருஷ்ணன் பிறந்த நாழிகை வரையில் விழித்திருப்பதின் கருத்து என்னவெனில், கம்ஸன் அவன் காவலாளர்கள் முதலியோர் ஸமயத்தில் தூங்கியதால் பகவத் தர்சனம்இழந்தார்கள், அதுபோல நாமும் தூங்கி ஏமாறாதுவிழித்து இருக்கவேண்டும் என்பதே. ஞானியோ இதை துரிய ஜாக்கிரதை (அதாவது நிஷ்டையில் ஞாபகத்துடன் பகவானை மறவாதிருத்தல்) எனக்கொண்டு, பகவானை மறந்தால் ஏமாந்து விஷயத்தில் சிக்கிக்கொள்ள வேண்டியதுதான் என்று கொண்டு இந்நோன்பில் விழித்திருக்கவேண்டும் என்று நன்றாக நமது பெரியோர்கள் ஏற்படுத்தினார்கள் என்று மஹான்களை மெச்சிக்கொள்வான்.

மேலும் கிருஷ்ணன் லீலைகள் ஒவ்வொன்றிலும் இம்மாதிரி உட்கருத்துக்கள் அமைந்திருப்பதை யூகித்து அறிவோர் காணலாம். உதாரண

மாக கிருஷ்ணஜயந்தியன்று விஷ்ணுகோயில் அலங்காரமாகிய காளிங்க மர்த்தனத்தை எடுத்துக்கொள்ளுவோம். [காளிங்கனை ஐந்துதலை நாகமாகக் காட்டியிருக்கும். இதை பஞ்சேந்திரியமாகவும், இது இருக்கும் மடுவை விஷயமாகவும், கிருஷ்ண பரமாத்மாவை ஞானமாகவும், முதலில் பரமாத்மா மடுவில் விழுந்து கலக்குவது ஞானம் முதலிய விஷயத்தில் சிக்கிக்கொள்வதாகவும், பின்னர் பாம்பால் சுற்றப்படுவது விஷயத்தில் அலையும் இந்திரியங்களால் ஞானம் பிடிபடுவதாகவும், பின்னர் பகவான் பாம்பின் மேல் ஏறி நர்த்தனம் செய்வது, ஞானம் ஓங்கி இந்திரியங்களை அடக்குவதாகவும், பாம்பு விஷம் கக்குவது விஷயானுபவம் செய்யும் சக்தியை இந்திரியங்கள் இழக்கும்படி செய்வதாகவும், காளிங்கனைக் கொல்லாது மடுவைவிட்டு ஓட்டிவிடுவது விஷயங்களிலிருந்து இந்திரியங்களைப் பிரிப்பதாகவும், பின்பு காளிங்கனை விஷய விருத்தியற்று ஸத்விருத்தியோடு கூடி இருக்கும் இந்திரியங்களாகவும் கொண்டு மெய்மறந்து நிற்கலாம், கிருஷ்ணஜயந்தியன்று வரும் பகவானைக்கண்டு. இந்தமாதிரி ஒரு மஹான் காளிங்கமர்த்தனத்தின் உட்கருத்தைக் கூறுங்கால் 'விஷம் விஷமல்ல, விஷயமே விஷம். ஸம்ஸாரம் விஷவிருக்ஷம். ஏனெனில் விஷம் ஒரு தேகத்தைக் கொல்லும், விஷயமோ அநேக ஜன்மங்களை வ்யர்த்தமாக்கும். மேலும், விஷம் முற்றிய கொடிய பாம்பினிடம் தான் மாணிக்கம்இருக்கும்,அதுபோல விஷயம் முற்றினால்தான் அதன்பேரில் அருவருப்பு உண்டாக விஷயத்யாக இச்சை உண்டாகும்'என்று மனனம்' செய்திருக்கிறார்.

இதுகாறும் கூறிவந்த ஞான நிலைதான் ஸகல நோன்புகளின் முடிவும். இப்படி இருப்பினும் இதை வெளிப்படையாகச் சொன்னாலும் நம்போன்றபாமரர்களுக்கு எளிதில் விளங்காது. ஒருவேளை அவை பாபமான எண்ணங்கள் என்று தோற்றினாலும்தோற்றம், ஆதலால்நம்பெரியோர்இந்தநோன்பைபாகவதக்கதையை ஒட்டி ஏற்படுத்தி நமக்கு முதலில்சுத்த மனதும் பக்தியும்உண்டாகும்படி தகுந்த ஏற்பாடுகள் செய்திக்கின்றனர். இந்த நோக்கத்தை நன்கு உணர்ந்து இவ்விரதாதிகளை வீண்காலம் போக்கல் எனக்கருதாது இந்தக்காலங்களில் கூடியவரையில் ஸாதாரண வ்யவஹாரங்களிலிருந்து ஒதுங்கி ஸத்காலக்ஷேபாதிகளில் காலத்தை நாம் போக்கிவருவோமாயின் முன் எடுத்துக் காட்டியுள்ள ஞானியின் ஆனந்தநிலை நமக்கும் முடிவில் கைகூடும் என்பதற்கு என்னஸந்தேகம்!

ஓம் தத்ஸத்.

2

# மனிதன்—அவன் தாழ்வும் ஏற்றமும்

## MAN HIS LITTLENESS & GREATNESS

[இந்த வியாஸம் தான் முதல் முதல் ஆங்கிலத்தில் ராஜம் அய்யர் எழுதிய வியாஸம். இதன் மூலமாகத் தான் அவருக்கு ஸத்குருலாபம் கிடைத்தது. இதை முன்னமே, 1908-ம் ௵ டிசம்பர் ௴ வெளியான விவேகபோதினி 6-ம் ஸஞ்சிகையில் எழுதியுள்ள இராஜம் அய்யர் சரிதை மனம்மாறிய சருக்கம் 169-ம் பக்கத்தில், சுருக்கி எழுதியிருக்கிறோம். நமது சந்தாதார்கள் நன்மைக்காக இந்தவியாஸத்தை மொழிபெயர்த்து இங்கு எழுதலானோம்.]

'பழகப்பழகப் பாலும் புளிக்கும்' என்பது பழமொழி. இந்த அதிகப் பழக்கமே நமக்கு மிகுந்த விரோதியாக குறுக்கே நிற்கின்றது. இப்பிரபஞ்சத்தில் அதிக அற்புதமான வஸ்துக்களை நாம் அடிக்கடி பார்த்துக்கொண்டிருப்பதால்தான் அவைகளை நாம் கவனியாமலும், அவைகளின் ஸ்வரூபம் இவ்வாறு நுட்பமாயும் அற்புதமாயும் உள்ளது என்பதை உணராமலும் நமது காலத்தை வீணாகக் கழிக்கிறோம். நம்முள் எத்தனைபேர் ஆகாயத்தை உற்றுநோக்கி அங்குள்ள அற்புதங்களைக்கண்டு ஆனந்திக்கக் கொடுத்துவைத்திருக்கிறார்கள்?' என்றுமிகுந்த இரக்கத்துடன் ரஸ்கின் என்ற ஓர் ஆங்கில ஆசிரியர் மனிதர்களை வினவுகிறார். இவ்வாகாயத்தை நாம் பிறந்தது முதல் எப்பொழுதும் பார்த்துக்கொண்டிருப்பதால் இது என்றைக்கும் இப்படித்தான் இருக்கும் என்ற நம்பிக்கை நமக்கு உண்டாக அதை நாம் உற்றுநோக்கி ஆனந்திக்காது நின்றுவிடுகிறோம். குழந்தைகள் ஆச்சரியத்துடன் புதிதாய் வந்தவர்களைப் பார்க்கின்றனவே ஒழியத் தமது தாய்மார்களை அவ்வாறு நோக்குவதில்லை. இதுபோலவேதான் நாமும் ஓர் புதிய நெசவு யந்திரத்தை எவ்வளவு ஆவலோடு பார்க்கிறோமோ அவ்வளவு ஆவலோடு அநேகாயிரம் அற்புத அண்டங்கள் நிராதாரமாகத் தொங்கிகொண்டு தமக்கு ஏற்பட்ட யார்க்கங்களில் நிலைமாறாது தொன்றுதொட்டு அலைந்துகொண்டிருக்கும் ஆகாயத்தை சற்றேனும் கண்ணெடுத்து நோக்குவதில்லை. இத்தகைய ஆகாயமானது நாம் பிறந்தகாலத்து இல்லாது திடீரென்று பின்னர் நமது கண்முன் தோன்றி இருக்குமாயின், நமது ஆச்சரியம், ஆவல் முதலியன கவிகளின் ஹிருதயங்களில் குடிகொண்டிருக்கும் சுத்த கல்பனாசக்தியைப்போல கிளம்ப, நம்முள் சிறியாரிற் சிறியராக இருப்பவர்கூட பயபக்தியுடன் தமது கையைச் சிரமேல்வைத்து சுத்த மனத்

தோடும் அச்சத்தோடும் வேதமந்திரங்களைப்போன்ற ஸ்தோத்திரங்களை வாயாரத் தாமே கற்பிப்பர். இப்பொழுது நமக்கிருக்கும் மந்தநிலையைப் பாருங்கள்! ஆகாயமோ ஒருநிமிஷம் இருந்ததுபோல மறுநிமிஷம் இருப்பதில்லை. அது ஸதா மாறிக்கொண்டும் மிகுந்த அற்புதத்தோற்றங்களை நிமிஷத்திற்கு நிமிஷம் காட்டிக்கொண்டும் இருக்கிறது. அதில் மேகங்கள் அற்புதமாய் மாறும் உருவங்களோடு ஸதா அங்கும் இங்கும் ஸஞ்சரிக்கின்றன; ஸூர்யோதய அஸ்தமனங்களோ வால்மீகி முதலிய வரகவிகளாலும் வர்ணிக்கமுடியாத ஆடம்பரத்துடன் காணப்படுகின்றன; சந்திரனோ மிகுந்த ஜிலு ஜிலுப்போடு கூடிய வேணுநாதம்போன்ற இனிமையுடன் பிரகாசிக்கின்றனன்; அதில் ஓய்வு ஒழிவு இல்லாமல் காட்சிகள் ஸதா மாறிக்கொண்டேயிருக்கின்றன; இம்மாதிரியான விஷயங்களைப்பற்றி நமக்கு யாதொன்றும் தெரியாதிருந்தும், நம்முள் அநேகரது மந்தமான மனதில் ஆகாயத்தின் சிறப்பு பதியாமலே இருக்கின்றது.

நாம் ஏன் இப்பொழுது ஆகாயத்தைப்பற்றிப் பேசவேண்டும்? நமக்கும் அதற்குமுள்ள ஸம்பந்தத்தை பஞ்சாங்கம், காற்றின் நிலைமையைக் கூறும் விளம்பரம் முதலியன நன்றாகக்காட்டிவிடுகின்றன. இது நமக்குப்போதும். நம்மோடு அதிக நெருக்கமாக இருக்கும் விஷயங்களைப்பற்றி விசாரிக்கப் புகுவோம். அதாவது மனிதனை எடுத்துக்கொள்ளுவோம். நமக்கு மனிதர்கள் ஸம்பந்தத்தைவிட்டு நீங்குதல் மிகக்கஷ்டம். நாம் தொழிலில் இருந்தாலும் ஸரி அல்லது அது இல்லாமல் இருந்தாலும் ஸரி எப்பொழுதும் மனிதர் மத்தியிலேயே பழகிவரவேண்டியிருக்கிறது. கூடிவாழ்தல், ஸ்நேகம், அன்பு ஆகிய இவைகளையே நாம் எக்காலத்தும் விரும்புவது. இப்படி நாம் ஸதா விரும்பும் மனிதனுடைய உண்மையான ஸ்வரூபத்தைப்பற்றி நமக்கு என்ன தெரியும்? ஒன்றும் தெரியாது! மனிதன் பிறக்கிறான், பின்பு அவன் இறக்கிறான், அவன் எங்கிருந்து வருகிறான் எங்கே பின்னர் போகிறான் என்பதே நமக்குத் தெரியாது. ஒருவன் கவியாகவும், மற்றொருவன் போர்வீரனாகவும் இருக்கிறான். இப்படி இவர்கள் இருக்கக் காரணம் இன்னதென்பதே நமக்குத் தெரியாது. மனிதன் உயிரோடிருக்குங்கால் மூச்சுவிடுகிறான், அவன் இறந்தபின்பு மூச்சு நின்றுவிடுகின்றது. மூச்சு விட்டுக்கொண்டிருந்தது யாது, மூச்சில்லாதிடப்படுவது யாது, நாம் பிறக்க காரணம் என்ன, நாம் எங்கேபோகிறோம், மரணத்தோடு நமது வாழ்க்கை முடிந்ததா, நாம் ஆத்மாவா, அநாத்மாவா, மனமா, இந்திரியங்களா, அல்லது ஒன்றுமே இல்லையா என்ற இந்த சங்கைகளுக்கு எந்த தேகதத்வசாஸ்திரத்தாலும் தக்க விடை கொடுக்க முடியாது. இம்மாதிரியான பெரிதாயும், ஆழ்ந்ததாயும் உள்ள ரகஸ்யங்களால் நாம் சூழப்பட்டிருக்கிறோம். இதை அறிய நாம் எவ்வளவு முயன்றாலும் நம்மால் ஆவதில்லை. இம்மாதிரியான இருளில் நாம் தத்தளிக்கிறோம் என்பதை உணர்ந்துதான் கேதே என்ற ஜர்மன் கவி 'நாம் எப்பொழுதும் விடாது அதிநுட்பமான விஷயங்களோடேயே ஸம்பந்தப்பட்டிருக்கிறோம், மனிதன் ஓர் பதருக்கு ஸமானம், அவனுக்கு உலகத்தைப்பற்றி ஒன்றும் தெரியாது தன்னைப்பற்றியோ அவனுக்கிருக்கும் அஞ்ஞானத்திற்கு அளவேஇல்லை' என்றார். இதுபோல 'இவ்வுலகமாம் பெரிய யந்திரத்தை அளந்தறிவது அஸாத்யம். அதில் இருக்கும் காரியகாரண ஸம்பந்தத்தை முழுவதும் அறியமுடியாது. நாம் இன்னார் என்பதும், நமது ஸ்வரூபம் இன்னது என்பதும், நம்மால் அறியமுடியாது' என்றார் ரூஸோ என்ற பிரஞ்சு நூலாசிரியர். இவைகள் அற்புதவாக்கியங்கள்; நாம் முன்னர் எடுத்து விவரித்த அதிபழக்கத்தால் உண்டாகும் மந்தகுணத்தை சிதற அடித்த மனிதரது வாக்கியங்கள். ஸமுத்திரத்தில் மீனுக்காக அலைகளை எளிதில் தாண்டிச்செல்லும் செம்படவனுக்கு ஸமுத்திர ஒலியின் காம்பீரியமும், அதில் உண்டாகும் புயல்களின் காம்பீரியமும், எவ்வாறு தோன்றாவோ, அவ்வாறு ஓயாது ஸமுத்திர அலைபோல மோதிக்கொண்டிருக்கும் விஷயங்களைக் கவனியாது, அவைகட்கு அப்பால்பட்டு நிற்கும் வழிதோன்றாது அதிகப் பழக்கத்திற்கு ஆளாகி கெட்டுப்போகும் மானிடர்கள் நிறைந்த இவ்வுலகில், பிரபஞ்ச வைசித்திரியம், அதன் ரகஸியத்தின் பெருமை, அதைப் பூர்ணமாக அறியமுடியாது என்பவைகளையும் நமது அறிவின் சிறுமையையும் உள்ளபடி உணரும் சக்திவருவதே ஓர்சிறந்த குணம். இது கிடைப்பது அநேக ஜன்மங்களிற் செய்த புண்யபலன் என்றே சொல்லவேண்டும்.

இவ்வாறிருப்பினும் நாம் பெரியவர்கள் வம்சத்திற் பிறந்தவர்கள். அவர்கள் கண்டு அறிந்து அனுபவித்த ஞானம் எல்லாம் நமக்கு ஸஹாயமாகவே இருக்கின்றன. அவைகளின் ஸஹாயத்தின்பேரில்

நமது சிற்றறிவிற் கெட்டியவரையில் அஹங்காரம் நிறைந்த விசித்திர ஜந்துவாகிய மனிதனது ஸ்வரூபத்தைப்பற்றி விவரிப்போம். கிருஷ்ண பரமாத்மா பகவத்கீதையில் (3-ம் அத்தியாயம் 42-ம் சுலோகத்தில்)

"இந்திரியங்கள் மேலனவாம் என்றுரைப்ப இந்திரியத்தி னின்மைதயில் மேலதனிற் சிறுடைத்து—புந்திதான் [ல் மன்னியவப் புந்தியினும் மாண்புடையான் அன்னோ னன்னவிலும் தோளாய் நீ காண்." [னோ

என்று உபதேசித்திருக்கிறார்.

மனிதன் ஸகல ஜந்துக்களிலும் மேலான ஜந்து என்றும் 'அரிது அரிது மானிடராதல் அரிது' என்றும், பெரியோர்கள் சொல்லுகிறார்கள். மனித தேகத்தின் ஸ்வரூபத்தை நோக்கில் இதை நாம் ஒப்புக்கொள்ளவே முடியாது. மனித தேகம் எவ்வளவு விசித்திரமாக இருந்தபோதிலும் மனிதனைவிட அதிகபலம், அழகு, காம்பீர்யம் முதலிய சிறப்புவாய்ந்த சரீரங்களை உடைய ஜந்துக்கள் அநேகம் உலகில் காணப்படுகின்றன. ஹக்ஸ்லி என்ற பிரகிருதி சாஸ்திரி ஜந்துக்களுள் குதிரையே நல்ல தேகக்கட்டு உடையது என்று அபிப்பிராயப்படுகிறார். நல்ல கொம்பன் யானைக்கு இருக்கிற காம்பீர்யம் நல்ல மல்லக ஜெட்டிக்குக்கூட இல்லை. சிங்கத்திற்கு உள்ளபார்வை நல்லவம்சத்திற் பிறந்த அரசனுக்குக்கூட இல்லை. சிறந்த காளைமாட்டின் நடையானது போர்வீரனது நடையைப் பழிக்கும் திறனுடையது. கானமயிலாடுவது கண்குளிரும் காட்சி. ரம்பைக்குக்கூட பஞ்சவர்ணக்கிளியின் அழகு இருந்திராது. பறக்க சக்தியில்லாத மனிதனைவிட வானம்பாடி மிகுந்த ஸ்வதந்திரம் உடையது. நல்ல ஸங்கீத ஸ்வரத்தைக்கேட்டு படமெடுத்தாடும் கிருஷ்ணஸர்ப்பம் தெய்வத்தன்மை வாய்ந்தது. ஆகாயத்தில் அசையாது உருவிச்செல்லும் கருடப்பட்சியும் அவ்வாறு என்பதற்கு என்ன ஸந்தேகம்! ஆகையினால் தேஹவிஷயமாகப் பார்க்குங்கால் மனிதன் மற்றைய ஜந்துக்களைவிட சிறப்புவாய்ந்தவன் அல்லன். யோசிக்குங்கால் மற்றை ஜந்துக்களைவிட மனிதன் ஆபாஸமான ஜந்து என்றே சொல்லவேண்டும். ஷோபன்ஹார் என்ற ஜர்மன் தத்துவசாஸ்திரி அநேகஜனங்களது முகங்கள் மந்தமாகக் காணப்படுகின்றது என்கிறார். பட்டணத்துப் பிள்ளையார் தேகத்தினால் விளையும் கஷ்டத்தைப் பின்வருமாறு கூறுகிறார்.—

"மானூர் விழியைக்
 கடந்தேறிவந்தனன் வாழ்குருவும்
கோனூகி யென்னைக்
 குடியேற்றிக்கொண்டனன் குற்றமில்லை
போனாலும் பேறிருந்தாலு
 நற்பேறிது பொய்யன்றுகா
ணானாலுமிந்த வுடம்போ
 டிருப்பது அருவருப்பே."

ஆகையால் மனிதனுக்கு சிறப்பு அவன் தேஹத்தால் உண்டாவதில்லை என்பது விளங்கும். அவன் மேன்மையும், நிமிர்ந்த முகத்தால் அவனுக்கு உண்டாகும் காம்பீர்யமும் முக்கியமாக அவனுள் ஆடி ஒளிரும் பரஞ்சோதியின் சிறப்பால் உண்டானவே ஒழிய வேறில்லை.

மனிதனது சிறப்பு தேஹத்தைவிடச் சிறந்தனவாகிய இந்திரியங்கள், மனஸ் ஆகிய இவைகளால் உண்டாகின்றதோ என்பதை விசாரிக்கப் புகுவோம். இந்திரிய வ்யாபாரங்களை மாத்திரம் நாம் தனியாகப் பார்த்தால் மனிதன் மற்ற ஜந்துக்களைவிட மிகத் தாழ்ந்தவனாகப் போகிறான். இதனாலேயே ஷோபன்ஹார் என்பவர் மனிதன் எல்லா ஜந்துக்களையும்விட மிகத் தாழ்ந்தவன் என்றே ஸாதிக்கிறார். உற்றுநோக்குங்கால் புலி கரடி முதலியவைகள் கூட நல்லவைகள் என்ற மதிப்பை நமக்கு உண்டாக்கும் குணம் வாய்ந்தவர்கள் மனிதர்களுள் அநேகர் காணப்படுகிறார்கள். புலிக்கும் கரடிக்கும் இயற்கையாக ஏற்பட்டுள்ள இரைகள் உண்டு. புலி ஒருநாளும் காக்கையைப்பிடிக்காது, கரடி பூனையைக் கொல்லாது, மனிதனுக்கோ அவன் சண்டை விஷயங்களில் இம்மாதிரியான எல்லையே கிடையாது. ஆடுகள், மாடுகள், இன்னும் பூமியில் உலாவும் மிருகங்கள் ஆகாயத்தில் பறக்கும் பக்ஷிகள் ஸமுத்திரத்திலுள்ள மீன்கள் இன்னும் ஸமுத்திரத்தின் வழியாக ஓடும் ஜீவஜந்துக்கள் ஆகிய எல்லாம் மனிதனுக்கு விரோதிகளாக ஏற்படலாம். எறும்புமுதல் மனிதர்பரியந்தம் உள்ள ஜீவராசிகளில் எதைத்தான் மனிதன் தந்நயம்கருதி வருத்தாது விடுகிறான்? இந்திரிய வியாபாரக்குழப்பத்தில் மேலான உறவுகள் எல்லாம் சிதறிப்போகின்றன. தாயாதி என்ற நெருங்கின உறவைக்காட்டும் பதம் விரோதி என்ற பொருளைக் கொடுக்கும் நிலைக்குவந்துவிட்டது. இந்திரிய வியாபார நிலையிலிருந்து ஷோபன்ஹார் பின்வருமாறு கூறுகிறார். 'நன்னடக்கை ஒழுங்கின்படி மனிதன் நிலை பொதுவாக இவ்வாறிருக்கின்றது

என்பதை அறியவேண்டுமோ? இதற்கு மனிதன் அதிர்ஷ்டத்தை விசாரித்தால்போதும். அது யாதெனில், அடங்கா ஆவல், இழிவு, கஷ்டம், துக்கம், மாணம் ஆகிய இவைகளே. மனிதர்கள் பொதுவாக உபயோகமற்றவர்களாக இல்லாவிடில் அவர்கள் இம்மாதிரியான கெட்ட அதிர்ஷ்டத்திற்கு ஆளாகி இருக்கமாட்டார்கள்.' மேலும் மனிதன் தான் செய்யும் செய்கைகளுக்கு உத்தரவாதி, அவனுக்கு இயற்கையான விரோதங்கள் இல்லை, அவன் புத்தியை அவன் இஷ்டப்படி உபயோகிக்கும் திறமுடையவன், என்ற இவ்வுண்மைகளைப் பற்றி ஆலோசிக்குங்கால் அவனை ஜீவஜந்துக்களுள் எங்குவைப்பது என்று பலமான சங்கை உண்டாய்விடுகின்றது. சிலந்தியும், எறும்பும் அநேகருக்கு நற்போதனைகளை செய்திருக்கின்றன. தேனீக்களின் ஸங்கமானது இங்கிலாந்திலுள்ள ஆளும்ஸங்கத்தைப் பழிக்கும் திறனுடையது. பசுவின் ஸாத்மீகம் பழமொழியாகப் போய்விட்டது. பாம்புகள் தமக்குள்ள ஸங்கீத அனுபவசக்தி, புஷ்பங்கள் வாஸனை முதலியவற்றை அனுபவிக்கும் சக்தி ஆகிய இவைகளால கவிராயர்களைப் பழிக்குந் திறனுடையவையாகின்றன. மனிதனது அளவிடமுடியாத ஸ்வயநயம் கருதல், வீண்பெருமைபேசல், கொடுமை, தற்புகழ்ச்சி, விளையாட்டுத்தனம் ஆகிய இவைகளைப்போன்ற பிசாசகுணங்களைநோக்கி, ஆழ்ந்து யோசிக்கும் திறனுடைய ஹாம்லத்தைப் போன்றவர் "காலகதியால் உண்டாகும் கஷ்ட நிஷ்டூரங்களையும், அடக்கியாள்பவாது அக்கிரமத்தையும், மதம் பிடித்தவர்களால் உண்டாகும் மானபங்கத்தையும், வெறுக்கப்பட்ட காதலின் வெந்துயர்களையும், நியாயஸ்தலங்களில் நேரிடும் காலக்கழிவையும், அதிகாரிகளின் கர்வத்தையும், அயோக்கியர்களிடமிருந்து யோக்கியர்கள் பொறுமையுடன் அனுபவிக்கும் அவமானங்களையும் யாரால் பொறுக்கமுடியும்?" என்று நன்றாகத்தான் கேட்பார்கள். பிரான்ஸு தேசத்திய நூலாசிரியர் ஒருவர், 'தனது ஸமூக வாழ்க்கையில் சிற்சில ஸமயங்களில் தற்கொலை செய்துகொண்டால் நலமாக இருக்கும் என்ற எண்ணம் வந்திராத மனிதன் உயிரோடு வாழ்ந்தென்ன பயன்?' என்று சொல்லுகிறார். 'வாடைக்காற்றே தாடைகிட்ட வீசுவாய், நன்றிகொல்வோர் கொடுமையினும் நின்கொடுமை அஞ்சத்தக்கதல்ல' என்ற வாக்கியத்தில் அடங்கியிருக்கும் உண்மை அனுபவித்தால்தான் விளங்கும். மனிதன் சும்மாவிருக்கக் கற்றுக்கொண்டானாகில்உலகில் உள்ள அனைவாசி துக்கங்களும் பறந்தோடிப்போம் என்றார் பாஸ்கல் என்ற பிரகிருதி சாஸ்திரி. மனிதனுக்கோ அவ்வாறிருக்க முடியாது. கீதைப் பிரகாரம் அவன் ஸதா கர்மங்களைச் செய்துகொண்டு பிறப்பு இறப்பு ஆகிய இவைகள் வளர்வதற்கு வேண்டிய வித்தை விதைத்துக்கொண்டே இருக்கின்றான். சிங்கத்தினது கோபமும், யானையினது மாறுப்பகையும், புலியினது கொடுமையும், பாம்பின் விஷமும், நரியின் தந்திரமும், பன்றியின் ஆபாஸகுணங்களும், எலியின்கெட்டகுணமும் மனிதனிடம் குடிகொண்டிருக்கின்றன. சிற்சில ஸமயங்களில் மனிதன் முற்கூறிய ஜந்துக்களைவிட அதிகமாகவும் போய் நடந்துகொள்ளுகிறபடியால் அவன் ஸ்திரமாயும் வர வர பலமாகும் குணமுள்ளதாயும் ராகத்துவேஷங்களாலாகியதாயும் உள்ள வலையை சிலந்தி தன் வலையை உண்டாக்குவதைப்போல ஸ்வபாவமாகவே உண்டாக்கிக்கொண்டு வருகிறான்.

* மனிதனது அறிவின் ஸ்வரூபத்தை நோக்குங்கால் அவன் அநேக ஜீவராசிகளைவிடச் சிறப்பு வாய்ந்தவனாகக் காணப்படுகிறான். இதில்தான் அவனுக்கு ஏற்றம் சற்று காணப்படுகின்றது. தனது கணித விஷயங்களில் மனத்தை இழந்து இருந்த நியூடன் என்பவர் பிரபஞ்ச விஷயங்களைவிட்டு அப்பாற்சென்றவர். ஆற்றிலிருந்து எழுந்து தான் நிர்வாணமாக இருப்பதைக்கூட அறியாது, மனதில் ஓர் அற்புத விஷயத்தைக் கண்டு அறிந்து வெளியே ஓடிவந்த ஆர்கிமீடீஸ் என்ற பிரகிருதி சாஸ்திரி மனிதரூபமான கந்தர்வன் என்பதற்கு என்ன ஸந்தேகம்! பீஸோல் மலைச்சிகரத்திலிருந்து சந்திரமண்டலத்தை தமது தூரதிருஷ்டிக்கண்ணாடி மூலமாகப் பார்த்து ஆனந்தித்த காலிலியோ என்ற வான சாஸ்திரி ஓர் வனதேவதை என்பதற்கு என்ன ஸந்தேகம்! ஆனால் இவ்வாறு அறிவில் ஈடுபட்டு பிரபஞ்சத்தை மறக்கும் மஹான்கள் அந்தோ! நம்முன் எவ்வளவு அபூர்வமாகக் காணப்படுகிறார்கள். மிஞ்சி நிற்கும் ஏராளமான ஜனங்கள் என்னும் பாலைவனத்தோடு ஒப்பிட்டால் இவர்கள் எவ்வளவு அபூர்வம்! ஒவ்வொருவனுக்கும் அறிவு உண்டு. அது இந்திரியவியாபாரங்களோடு பேதாபேதமின்றிக் கலந்திருப்பதால் அது அவனை வெகுகாலம் காப்பாற்றுவதில்லை. அது பிரபஞ்ச விஷயங்களாகிய கொடிய ஸமுத்திரத்தில் இடை

* [மனிதனது புத்தியில் அறியும் சக்தியையுடைய அறிவு அதை விருத்திபண்ணும் சக்தியை உடைய கற்பனாசக்தி ஆகிய இரண்டு பாகங்கள் உண்டு.]

விடாது அவனைத்தத்தளிக்கச் செய்யும் புயலாக ஏற்படுகின்றது. மனிதன் அடைந்திருப்பவைகளுள் அறிவு மிகச் சிறந்ததே. ஆனால் வக்கீல், வியாபாரி இவர்கள் போன்ற அநேகரிடத்தில் அது சீர்குலைந்து காணப்பட்டு பொதுவாகவும், சிறப்பாகவும் ஜனங்களுக்கு கெடுதலாக முடிகின்றது. இவ்வறிவால் நமக்கு 'ஆகாயத்தில் வாணிபம் நடாத்தவும், மலைகளைப் பிளக்கவும், ஸமுத்திரத்தை அடக்கவும், மின்னலை உண்டாக்கவும், ஸூர்யனை நிறுக்கவும்' சக்திகள் உண்டாகலாம். ரேனன் என்ற ஆசிரியர் கூறுவதுபோல பிரபஞ்சமே கடவுளாகிய தனது முடிவைநோக்கி இயற்கையாகவே ஸ்திரமாகவும் உண்மையாகவும் போகின்றது என்பது உண்மைதான். ஆதலால் பிரபஞ்சமானது ஸதா முன்னோக்கி மாறுதல் அடைந்துகொண்டே நடக்கட்டும்; நாம் இதனோடு போகுங்கால் மறவாது அறிவிற்கு தேவதையாகிய ஸரஸ்வதியை ஸ்தோத்திரம் செய்வோம்.

நமது பிரபஞ்ச அறிவு விருத்தியாகி நாம் மேலான நிலையை அடையுங்கால் நமது நிலை எவ்வாறாகின்றது என்பதை நோக்குவோம்.. முதலில் தண்ணீர் என்ற ஓர் வஸ்துவை இப்பொழுது பிராணவாயுவும் ஜலவாயுவும் சேர்ந்தசேர்க்கை என்கிறோம். ஆனால் இவ்விரண்டு வாயுவும் எத்தன்மையது என்பதை யாரால், அறியமுடியும். ஜந்து தத்வசாஸ்திரம், பூததத்வசாஸ்திரம், தேகதத்வசாஸ்திரம், வானசாஸ்திரம், சக்திதத்வசாஸ்திரம், வஸ்து தத்வசாஸ்திரம் ஆகிய ஸகலபிரகிருதிசாஸ்திரங்களிலும் நமது அறிவுக்கு எல்லை உண்டு, அதைத்தாண்டி அறிய நமது அறிவிற்கு சக்தியே இல்லை. இந்த சாஸ்திரங்களில் நாம் பிரவர்த்தி செய்துகொண்டு போகப்போக நமது அறியாமை அதிகமாகப் புலப்படத் தொடங்கும். ஸ்ருஷ்டி ரகஸியத்தின் பெருமை அதிகமாக விளங்கும். இதனாலேதான் உலகத்தை முற்றும் உணரவேண்டும் என்ற பேராவலோடு அறியப்புகுந்து வெகுகாலம் விடாது முயற்சித்தபின்பு சிறந்த தத்வசாஸ்திரியாகிய கான்ட் என்பவர் பிரபஞ்ச விஷயங்களை முற்றும் உணரமுடியாது என்றார். இது புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டதல்ல. முன்னரே ஐரோப்பாவில் ஸாக்ரடீஸ் என்ற மஹானாலும் நமது பரதகண்டத்தில் சங்கராசாரியர் என்ற மஹாபுருஷராலும் மிகுந்த வணக்கத்துடன் இவ்வுண்மை வெளியிடப்பட்டது. நியூடன் 'நான் அளவிட்டு அறியமுடியாத ஸாகரத்தின்கரையில் சிப்பி முதலியவைகளை பொறுக்கி ஆனந்தித்துக்கொண்டிருக்கும் குழந்தைக்கு நிகரே ஒழிய வேறில்லை' என்று சொல்லிய வார்த்தை வாசாவான அவை அடக்கமல்ல. நான் ஒருதுளி ஜலத்தை எடுத்துக்கொண்டு அதை ஜலம் என்று சொல்லிவிட்டு சும்மா இருக்கிறேன். டர்னர் என்ற பிரகிருதிசாஸ்திரி அதை சிறகாகிதத் துண்டில் இழுத்து அதில் உண்டாகும் மாறுதலைக் கண்ணுற்று ஆச்சரியம் அடைகிறார். டின்டேல் என்ற பிரகிருதிசாஸ்திரி அதை நிறுத்துப் பார்த்துவிட்டு ஓர் பூதக்கண்ணாடியால் அதை பரிசோதிக்கிறார்; என்ன ஆசசரியம்! அதனுள் அநேக ஜந்துக்கள் பூர்ணஜீவனோடும், உணர்ச்சியோடும், சுறுசுறுப்போடும் மனிதன் தனது தொழிலை எவ்வளவு ஆவலுடனும் ஸ்வதந்திரத்துடனும் நடத்துகிறானோ அவ்வாறே தமது தொழிலையும் நடத்திக்கொண்டிருக்கின்றன. பாவம்! டின்டேலது மனம் ஆச்சரியத்தாலும் பயத்தாலும் ஸ்தம்பிக்கிறது. உடனே அந்தத் தண்ணீர்துளியை நழுவ விட்டுவிட்டு ஆழ்ந்தயோசனையில் மூழ்கிவிடுகிறார். அந்தத் தண்ணீர்துளியை அறியும் விஷயத்தில் நானாவது டர்னராவது, டின்டேலாவது கொஞ்சம்கூட முயற்சிக்கவில்லை; ஏனெனில் அதை நம்மால் அறியவேமுடியாது. இது ஸத்யம். இது நமக்கு திருப்திகரமான முடிவாக இல்லாவிடினும் உண்மை என்பதற்கு ஸந்தேகமேயில்லை.

ஆதலால் அறிவுவிஷயத்தில் நாம் மற்றைய ஜந்துக்களைவிட ஏற்றமுடையவர்களாக இருந்தபோதிலும், ஒவ்வொரு இடத்திலும் 'எம்மால் பூர்த்தியாக ஒன்றையும் அறியமுடியாது' என்று நமக்கு இடைவிடாது தோன்றுவதால் நாம் சிறந்த ஜந்து என்று பெருமை பாராட்ட நமக்கு இடமே இல்லாமல்போகிறது. அப்படிப் பாராட்டினால் அதை வீண் பெருமையென்றே சொல்லவேண்டும். நம்மைச்சுற்றி இருக்கும் வஸ்துக்களின் ஸ்வரூபம் இத்தன்மையது என்றும், அவைகளுக்கு இவ்வளவு சக்தியுண்டென்றும், ஆகாயத்தில் தொங்கும் அண்டகோளங்களின் ஸ்வரூபம் இப்படிப்பட்டது என்றும் நம்மால் அறியமுடியவில்லை. நாம் மூச்சுவிடும் காற்று, நாம் நடமாடிவரும் பூமி, ஆகாயத்தில் தொங்கிக்கொண்டு தமது பிரகாசம் முதலியவைகளால் மனிதனுக்கு அவனது சிறுமை தாழ்வு முதலியவைகளை இடையறாது எடுத்துக் காட்டிக்கொண்டிருக்கும் நக்ஷத்திரங்கள் ஆகிய இவைகளைப்பற்றி நமக்கு ஒன்றுமே

தெரியாது. ஆனால் பிரபஞ்சம் அளவிட முடியாதது என்றும், நமது பூகோளத்தைப்போல கணக்கிடமுடியாத அநேக கோளங்கள் அதனுள் அடங்கி இருக்கின்றன என்றும், ஸ்ருஷ்டிமுழுவதும் வாக்கிற்கு எட்டா காம்பீர்யத்தை உடையதென்றும், நமது அற்பமான தேகத்தோடும் இழிவான இந்திரியங்களோடும், மிகக்குறைந்த சக்திவாய்ந்த அறிவோடும், கெட்டகுணம், வீண்பெருமை பேசல், அறியாமை ஆகிய இவைகளோடும் கூடிய நாம் மிகத் தாழ்ந்தவர்கள் என்றும் நமக்கு நன்றாகத் தெரியவரும். அளவிடமுடியாததாயும், சக்திவாய்ந்ததாயும் உள்ள இப்பிரபஞ்சத்தில் நாம் அணுக்கள்—பரமாணுக்களே ஒழிய வேறில்லை. முற்காலத்தில் மூடத்தனமாக மனிதனே எல்லாவற்றிற்கும் மத்தியஸ்தானமென்று எல்லோரும் எண்ணியிருந்தனர், ஆனால் இந்த விசாரணையின்பேரில் அவன் ஸாரமற்றவனாகி இருந்தவிடமே தெரியாதவனாகப் போய்விடுவான்.

புத்தியின் மற்றையப் பாகமாகிய கற்பனாசக்தி என்ற ஓர் சக்தி மனிதனிடம் இருக்கின்றது. அது தான் மனிதனது சிறுமை எல்லாவற்றையும் அகற்றும் திறனுடையது. சிறுமைநிறைந்த மனிதனிடம் இச்சக்தி இருப்பது விஷம் நிறைந்த கிருஷ்ண ஸர்ப்பத்தினிடம் நாகரத்னம் இருப்பது போலாகும். மதிப்புக்கடங்காத இச்சக்தியால் பிரபஞ்சத்தை ஒருவாறு அளவிடலாம். 'கடவுளது வாக்குமுதலிய எல்லாவற்றிலும் நீ (கற்பனாசக்தி) தங்கு தடையின்றி எளிதில்செல்லும் திறனுடையாய். இது மாத்திரம் அல்ல கடவுளது ஸ்ருஷ்டிக்கப்புறமும் நின் நாட்டம் உண்டு.' என்றார் ஓர்கவி. ஷெல்லி வேர்ட்ஸ்வர்த்து முதலிய சுத்த கற்பனா விஷயம் நிறைந்தவர்களது கவிபாடும் திறமையானது இந்த கற்பனாசக்தியாகிய செடியில் உண்டாகும் அற்புதமான புஷ்பம். பிரபஞ்சத்தை முற்றுமுணர நம்மால் முடியாது என்பது உண்மையாயினும், அதை நாம் உள்ளபடி அனுபவித்து ஆனந்திக்கும் சக்தி நமக்கு உண்டு. 'பிறரால் அறியக்கூடிய் விஷயங்களானாலும் ஸரி, அறியக்கூடாத விஷயங்களானாலும் ஸரி, அவைகளை அனுபவித்து ஆனந்திப்பதிலேயே உண்மையான கவிராயர்கள் திருப்தி அடைவார்கள்' என்றார் வேர்ட்ஸ்வர்த். (இதுபோலவே நமது கவிகளும் 'புத்தியாலறியொணாப் புராணனை பத்தியாம் வலையிற்படுத்து' என்றார்கள்.) ஷெல்லி என்பவர் அவரது சுத்த கற்பனை நிறைந்த சிற்சில பாடல்களில் ஆகாயத்தை அளவிட முயலுகிறார். இது போதாதென்று தமது கற்பனாசக்தியை பூர்ணமாக உபயோகித்து 'ஆகாயம் என்றால் என்ன? அது பனித்துளிபோன்றதுதானே!' என்றார்.

இதுதான் சிறந்த கற்பனா சக்திவாய்ந்த கவிதையின் ஸ்வரூபம். உலகக் கவலைகளை மறந்து, வானம்பாடியானது அளவிடமுடியாத ஆகாயத்தில் பறந்தோடிப்போவதுபோல, வெளியேறிப்போய் அந்த பரவெளியேதானாகி சுற்றுகிற்குந்திறனுடைய மனத்தை உடையவர்கள் மனிதர்கள் என்பதை இந்த கற்பனாசக்தி பேசாமல் ஆனந்தகரமான அனுபவமூலமாகக் குறிப்பிக்கின்றது. இதில் ஈடுபட்டிருக்குங்கால் மனிதனுக்கு யாதொரு தடையும் ஏற்படுவதில்லை. இம்மாதிரி பரம்பொருளை நோக்கிப் புறப்படும் மனதை எல்லை கட்டித் தடுக்கவல்லது ஒன்றும் இல்லை. ஆதலால் ஓ மனமே! உனது இழிவானபந்தம் சிதறிப்போமளவும் உறுதி உறுதி விடாதுபாடிக் கொண்டிரு. ஏனெனில் இங்கு நீ மோக்ஷமார்க்கத்திற்கு வந்துவிட்டாய், பரம்பொருளது திவ்யஸ்தானத்தருகில் வந்துவிட்டாய். அவர் உனது முயற்சியைக்கண்டு ஸந்தோஷித்து உனது வரவை ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார். இந்த விஷயத்தில் மனிதனைவிடச் சிறந்த ஜந்து எங்குதான் இருக்கின்றது? அவன் இங்குதான் அளவிடமுடியாத சிறப்பிற்கு ஆளாகிறான்.

இங்குகூட மனிதனது ஏற்றம்முழுவதும் வெளியாகிறதில்லை; ஏனெனில் கற்பனாசக்தி ஸுகத்தையும் துக்கத்தையும் கொடுக்கின்றது. இதுபிரபஞ்சத்தினது ஏற்றத்தையும் மனிதனது தாழ்வையும் உள்ளபடி காட்டிவிடுகின்றது. மேலும் உலகில் ஸாதாரணமாக ஈசுவர ஸ்ருஷ்டியில் அடிக்கடி ஏற்படும் கோடைநாள், பாலைவனம், அசுத்தமான குளம் முதலிய வஸ்துக்களிடம் இந்தசக்தி நமக்கு அன்பு உண்டாகும்படி செய்யும் திறனுடையதல்ல. ஆதலால் யோசிக்குங்கால் கோயிலுக்குப்போகும் வழியில் தங்கிநிற்க ஏற்பட்டிருக்கும் மண்டபம்போல இது மோக்ஷமார்க்கத்தில் ஏற்பட்டுள்ள ஓர் களைப்பு நீக்கும் ஸ்தானமே ஒழிய முழுவதும் ஏற்றமான முடிவல்ல.

கற்பனா சக்தியினால் விளையும் ஆனந்தத்தைவிட மிகவும் ஏற்றமான ஆனந்தத்தை அனுபவிக்க பிறவியிலேயே மனிதர்களுக்கு பாத்யதை உண்டு. ஏர்நா

னும் மாறாத ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டிருப்பதும், நிலவு பட்டப்போற்காயும் இரவைக்கண்டு ஆனந்திப்பதுபோல் மிகுந்த தாபமான பகலைக்கண்டு ஆனந்தித்துக் கொண்டிருப்பதும், மனிதாது ஸத் கிருத்தியங்களையும் துஷ் கிருத்தியங்களையும் கண்டு மனம்கலையாதிருப்பதும், நல்ல அழகிய ஸூர்யாஸ்தமனத்தைக் கண்டு ஆனந்தபாஷ்பம் பெருகவிடுவதும், பாடிக்கொண்டு உயர உயரச் செல்லும் வானம்பாடியுடன் மனதைப் பறக்கவிடுவதும் மாத்திரமன்றி தாம் அனுபவிப்பதை வாயாரச் சொல்ல முடியாமலும், ஒளிக்க முடியாமலும் இருக்கும் [illegible]னுபவம் வரும்படி பிரபஞ்சத்தோடுகலந்து, தானே 'ஸூர்யன் அதன் அஸ்தமனம், அதன் சிறப்பு, வானம்பாடி, அதன் பாட்டு, ஆகாயம் முதலிய ஸகலப் பிரபஞ்சமுமாகி நின்று ஆனந்திப்பதுமே மனிதனுக்கு உண்மையாக ஏற்பட்டுள்ள உரிமைப் பெருஞ் செல்வம். ஆகாயம், நக்ஷத்திரம், மலைகள், ஆறுகள், தேகம், மனஸ், இந்திரியங்கள் முதலிய பிரபஞ்சம் எல்லாவற்றையும் தாண்டி அப்பாற்பட்டு இந்த ஜன்மத்திலேயே நிற்கும் அதிர்ஷ்டத்தை உடையவன் மனிதன். இதனால் அளவிட முடியா ஆகாயத்தில் கரைந்துவிடும் சக்தி அவனுக்குவர, அவன் இடையறாது கோஷிக்கும் ஸமுத்திரம், உயர்ந்தமலை, பிரகாசிக்கும்நக்ஷத்திரங்கள், ஸதா சப்திக்கும் அருவிகள் முதலிய எல்லாவற்றையும் இந்த ஜன்மத்திலேயே வியாபித்து ஆனந்திக்கும் சக்தி அவனுக்கு வருகின்றது. இந்தசக்தி மனிதனுக்கு இருப்பதினால்தான் (அதாவது மனிதனது சின்மயஸ்வரூபத்தினாலும் அவனது ஞானானந்த வல்லமையாலும் தான்) மனிதன் ஸகல ஸ்ருஷ்டிகளிலும் சிறந்தவன்; இதனால்தான் 'அரிது அரிது மானிடராதல் அரிது? ஆகவே மனிதன் உண்மையில் உலகில் எங்கும்பரவியிருக்கும் ஆனந்தமயமான பரப்பிரம்மம் இந்தநிலையில்தான் அவன் கோபம், இழிவு கெட்டகுணம், முதலியவைகளுக்கு முற்றிலும் அப்பாற்படுகிறான் புத்தி அலைபாய்ந்தோடுவதும், இந்திரியங்கள் புயல்போல நிலைகுலையும்படி செய்வதும் இங்கு இல்லவே இல்லை. இது எல்லாம் ஓய்ந்தவிடம் இம்மாதிரி விடுபட்ட முக்தர் மனதில் நிலவினும் இனியதாகி ஸதா பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஜ்யோதியின் சிறப்பு காணப்படும், கட்டுக்கடங்காது. வாக்கிற்கு எட்டாத ஆனந்தம் குடிகொண்டிருக்கும். மைத்ரேய உபனிஷத்திலுள்ள ஞானியைப்போல இம்மனிதனும் 'நான்தான் நான், மற்றவர்களும்நான்தான், பிரம்மமும் நான் ஸ்ருஷ்டிகர்த்தா நான், ஜகத்குரு நான், பிரபஞ்சமே நான், அவனும் நான், என்று ஆடிப்பாடி மெய்ம்மறந்து ஆனந்திக்கலாம். ஏனெனில் அவனே கத்தியால் வெட்ட முடியாததாயும், நெருப்பால் எரிக்கமுடியாததாயும், ஜலத்தால் நனைக்கமுடியாததாயும், காற்றால் உலர்த்த முடியாததாயும், பிறப்பற்றதாயும், மாறுதலற்றதாயும் இறப்பற்றதாயும் இருக்கும் ஆத்மா ஆகிவிடுவதனால். இதுதான் மனிதனிடம் காணப்படும் சிறப்பு ஒவ்வொரு நிமிஷத்திலும் 'பாகக்காய்க்காகப் பங்கை விற்றகதையாய்' அஞ்ஞானத்தால் மூடப்பட்டு விலையற்ற ஆத்மலாபத்தை இடையறாது புத்திகெட்ட மனிதன் அற்பமான உலக இன்பங்களின்பொருட்டு விலைப்படுத்துகிறான்.

நம்மவருள் பெரும்பாலாருக்கு நமது ஸ்வரூபமே தெரியாது. நமக்கு எவ்வளவு ஆதாரம் இருக்கின்றது என்பதும் தெரியாது. எண்சாண் உடம்பினுள் மறைந்துகிடைக்கும் எண்ணிறந்த செல்வம் இன்னது என்பதும் தெரியாது. வேதாந்த சாஸ்திரமானது, ஆளவந்தார் சரிதத்தில் வரும் மணைக்கல் நம்பியைப்போல, விலையற்ற நமது உரிமைப்பொருளை உறுதியாக கைப்பிடித்து மாறாத ஆனந்தம் அனுபவியுங்கள் என்று நம்மை ஸதா அழைக்கின்றது. இதுதான் உபநிஷத்துக்களில் அடங்கியிருக்கும் வாக்குத்தத்தம். இதில்கொஞ்சமேனும் பூர்த்தியாகாது நின்றுவிடுவதில்லை என அநேக மஹான்கள் அனுபவித் தறிந்திருக்கின்றனர். மனிதனது உண்மை உயர்வு இத்தன்மையது என்பதை இவ்வாறு அறிந்தபின்னர் பின்வரும் கடவுள் தியானம்,

'ஓ பரம்பொருளே! இவ்வுலகில் உமது நாமம் எவ்வளவு சிறப்பு உடையதாக இருக்கின்றது! உமது சிறப்பெல்லாம் ஆகாயத்தில்வெளியாகின்றது என்பதுபோல இராது,

'ஓ ஆத்மாவே! உன்நாமம் உலகில் எவ்வளவு சிறந்ததாக இருக்கின்றது! உனது சிறப்பு ஆகாயத்திற்கும் அப்பாற்பட்டது. நீயேதான் ஆகாயம், சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், இவைகளை எல்லாம் உண்டாக்கிய கடவுளும் நீயே ஆகிறாய். ஓம் தத்ஸத்' என்று மாறிவிடவேண்டியது.

ஓம் தத்ஸத்.

## பர்மா

### BURMA



பர்மா நமது இந்தியாவுக்குக் கிழக்கேயுள்ள ஒரு விஸ்தாரமான பூமி. இந்தியாவிலிருந்து பர்மாவுக்கு நீர் மார்க்கம், நிலமார்க்கம் இரண்டு வழியாகவும் செல்லலாம். பர்மாவுக்கு முக்கியபட்டணம் ரங்கூன். சென்னப்பட்டணத்திலிருந்து ரங்கூனுக்கு கடல் மார்க்கமாய் 1020-மைல் தூரம். மதராஸுக்கும் ரங்கூனுக்கு மிடையேதான் அந்தமான் தீவுகள் இருக்கின்றன. கப்பலில் வரும்போதே தூரத்தில் அத்தீவுகளைப் பார்க்கலாம். தரைமார்க்கமாய் பர்மா போகவேண்டுமானால் ரயிலில் நேரே கல்கத்தாபோக வேண்டும். அங்கிருந்து சிட்டகாங் என்னும் பட்டணம்வரையில் ரயிலில்போகலாம். அதற்குமேல் ரயில் பாதை கிடையாது. சிட்டகாங்குக்கும் புரோமுக்கும் ஒரு ரயில்பாதை போடுவதாக ஒரு பிரஸ்தாபம் இருந்தது. லார்ட் கர்ஸன் ராஜ்ய தந்திரத்தை யனுசரித்து அந்தப்பாதை போடக்கூடாதென்று தடுத்துவிட்டார். புரோமுக்கும் ரங்கூனுக்கும் இப்பொழுது ரயில் ஓடிக்கொண்டிருக்கிறது. சிட்டகாங்குக்கும் புரோமுக்கும் ரயில்பாதை மாத்திரம் போட்டுவிட்டால் மதிராசிலிருந்து ரங்கூனுக்கு நேரில் ரயில் மார்க்கத்திலேயே வந்துவிடலாம். திரும்பவும் இப்பொழுது சிட்டகாங்கை புரோமுடன் ரயில் பாதையினால் சேர்க்கவேண்டுமென்று யோசித்து சர்வே செய்துக்கொண்டிருக்கிறார்கள். சிட்டகாங்கிலிருந்து கால்நடையாக பர்மாவுக்கு வரலாம். ஆனால் அது சிரமமாதலால் ஜனங்கள் கப்பலேறி ரங்கூன் போய்விடுகிறார்கள். கல்கத்தாவுக்கும் ரங்கூனுக்கும் நீர்மார்க்கமாக 787-மைல். மதராசுக்கும் கல்கத்தாவுக்கும் ரயில்மார்க்கமாய் 1032-மைல். நீர் மார்க்கமாய் கல்கத்தாவுக்கும், சிட்டகாங்குக்கும், 376-மைல் தூரம். புரோமுக்கும் சிட்டகாங்குக்கும் தரை மார்க்கம் சுமார் 600-மைலுக்குள்ளிருக்கும். ரங்கூனுக்கும் புரோமுக்கும் ரயில் மார்க்கம் 161-மைல். ஆதலால் தரைவழியாக மதராசிலிருந்து ரங்கூனுக்கு வரவேண்டுமானால் இரண்டாயிரத்துச் சில்லரை மைல்தூரம் பிரயாணஞ்செய்யவேண்டும். இன்னும் சில வருஷங்களுக்குள் ரயில்மார்க்கம் மதராசிலிருந்து ரங்கூனுக்கு பூர்த்தியாகிவிடும்.

சரித்திரம்:—இந்துசீன தீபகற்பத்தில் சீயராஜ்யத்துக்குக் கீழ்ப்பட்டு பர்மா ஒருகாலம் ஒரு சிற்றரசாக இருந்தது. ஒரு சமயம், தலயிங்கர் பர்மாவில் பெரும்பாகத்தை அரசாண்டு வந்தார்கள். ஷான் சாதியாரும் பர்மாவில் அரசாண்டு இருக்கிறார்கள். பர்மர்களுடைய அதிகாரம் 1852-வது வருஷம் வரையில் பர்மா தேசம் முழுதும் பரவியிருந்தது. அந்த வருஷத்துக்கடைசியில் பர்மாவின் தென்பாகம் ஆங்கிலேயரால் ஆட்சிகொள்ளப்பட்டது. அரக்கான் ராச்சியம் ஆதிகாலத்தில் வெகுநாள்வரைக்கும் இந்தியாவில் மகதராச்சியத்தின் பெரும்பாகமாகவே இருந்தது. பெகு ராச்சியம் சோழராச்சியத்தின் பாகமாக சுமார் 500 வருஷகாலமிருந்தது. தெலுங்காண ராஜ்யத்திலிருந்து சில ஜனங்கள் குடியேறி ராமண்ண தேசமென்னும் தலயிங்க ராச்சியத்தைக் கண்டுபிடித்திருந்தார்கள்.

ஐரோப்பியரில், முதல் முதல் போர்த்துகேசியர் பெகு அரசனோடு ஒரு உடன்படிக்கை செய்துகொண்டு 1519-ம் வருஷத்தில் மார்ட்டபானிலும், சிறியத்திலும் வியாபாரச்சாலை கட்டிக்கொண்டார்கள். பதினாறாவது நூற்றாண்டினிறுதியில் டச்சுக்காரர் நீக்கிரேஸ் தீவைக் கைக்கொண்டார்கள். 1612ஆல் ஆங்கிலேய கீழ் இந்தியா கம்பேனியார், சிறியம், புரோம்,ஆவா,பாமோ முதலியஇடங்களில் வியாபாரஸ்தலங்களையும் ஏஜண்டுகளையும் அமர்த்தினார்கள். பெகுவிலிருந்த பர்மா ராஜப் பிரதிநிதிக்கும் டச்சுக்காரருக்கும் நேர்ந்த ஒரு மனஸ்தாபத்தால் ஐரோப்பிய ஜாதியார் எல்லோரும் பர்மாவிலிருந்து விலக்கப்பட்டார்கள். டச்சுக்காரர் திரும்பவும் பர்மாவுக்கு வரவேயில்லை. 1688-ஆல் சிறியத்திலிருந்து பர்மா கவர்னர் மதராசிலிருந்த ஆங்கிலேய கவர்னருக்கு இங்கிலீஷ் வியாபாரிகளை பெகுவில் வந்து வர்த்தகம் செய்ய அனுப்பும்படி எழுதினார். 1698-ஆல் ஒரு வர்த்தகத் தலைவன் சிறியத்திற்கு அனுப்பப்பட்டான். சிறியம், நீக்கிரேஸ், பாஸின் இவ்விடங்களில்

பண்டகசாலைகள் ஆங்கிலேயரால் கட்டப்பட்டன. பிராஞ்சுக்காரரும் ஒரு வாஸஸ்தலம் பெற்றிருந்தார்கள். 1755-௵ல் அலொம்பொரா என்னும் பர்மா வீரன் தலயிங்களை ஜயித்ததற் கறிகுறியாக ரங்கூன் நகரத்தையுண்டாக்கி தன் கைக்கு அகப்படாமல் வெகுநாள் வரைக்கும் ஈடுகொடுத்துவந்த சிறியத்தை அழித்துவிட்டான்.

சிறியத்திலிருந்த ஆங்கிலவர்த்தகர்கள் பர்மர்களுக்கு அனுகூலமாயும், பிராஞ்சி வர்த்தகர்கள் தலயிங்கருக்கு அனுகூலமாகவும் இருந்துவந்தார்கள். ஆனால் வெற்றிபெறும் கக்ஷியோடு ஐரோப்பிய ஜாதியாரிருவரும் சிநேகமாகவே இருந்தார்கள். அலொம்பொரா, பிராஞ்சுக்காரர்கள் தலயிங்கருக்கு யுத்த ஆயுதங்கள் கொடுத்து உதவிபுரிந்து வந்தார்கள் என்று அறிந்து, பிராஞ்சுக்காரர்களை எல்லாம் கொன்றுவிட்டான். ஆங்கிலேயரும் அடிக்கடி தலயிங்கருக்கு ஒத்தாசை செய்திருந்தார்கள். இருந்தும் அவர்கள் நீக்கிரேஸ் தீவையும் பாஸினில் சில வியாபார ஸ்தலங்களையும் கொடுக்கப்பெற்றார்கள். ஆனால் 1759-௵த்தில் கலகக்காரருக்கு ஆயுதங்கள் சப்ளைசெய்து வந்ததாகஆங்கிலேயர்மேல் சந்தேகமுண்டாகி பத்து இங்கிலீஷ்காரர்களும் நூறு இந்தியர்களும் கொலை செய்யப்பட்டார்கள். அடுத்தவருஷத்தில் அலொம்பொரா இறந்துபோனபடியால் அவனுக்குப்பின்வந்தவனிடமிருந்து பாசீன் பண்டகசாலையைத் திருப்பிக் கட்டிக்கொள்ள ஆங்கிலேயர் உத்தரவு பெற்றார்கள். ஆனால் கொலைசெய்யப்பட்டவர்களுக்கு ஈடு கிடைக்கவில்லை.

1784௵த்தில் போதாபாயன் என்பவன் அரக்கான்மேல் படையெடுத்து அதைக் கைப்பற்றினான். அப்பொழுது அங்கிருந்த ஜனங்களிலநேகர் அடுத்த ஆங்கிலேய ராஜ்யமாயிருந்த சிட்டகாங்கில்போய் அடைக்கலம் புகுந்து அங்கிருந்து அடிக்கடி பர்மா ராஜ்யத்திற்புகுந்து, கொள்ளை அடித்துக்கொண்டிருந்தார்கள். இந்த கலகக்காரரைத் தங்கள் கையில் ஒப்புவித்து விடும்படியாக ஆங்கிலேயரைக்கேட்டுக்கொண்டே பர்மர் ஆங்கில ராஜ்யத்துக்குட்புகுந்தார்கள். இதனால் ஆங்கிலேயருக்கும் பர்மருக்கும் விரோதமுண்டாயிற்று. இதைத் தீர்க்கும்பொருட்டு 1785-௵த்தில் கவர்னர் ஜனரல் பர்மாவுக்கு ஒரு தூது அனுப்பினார். 1796-௵த்தில் ரங்கூனில் ஒரு ஆங்கில ஸ்தானாதிபதி நியமிக்கப்பட்டான். 1824௵த்தில் பர்மர்கள் ஆஸாம், மனிப்பூர் மேல் படையெடுத்து வந்தார்கள். மகாபந்தூலா என்னும் பர்ம வீரன் ஒரு சேனையைக் கூட்டிக்கொண்டு அரக்கான் வந்து அங்கிருந்து வங்காளத்தின்மேல் படை எடுத்து வருவதாகப் புறப்பட்டான். 1824-௵ மார்ச்சு௴ 5௳ ஆங்கிலேயர் பர்மருடன் யுத்தம் தொடங்கினார்கள். பர்மர்கள், ஆஸாம் கச்சார் மணிப்பூரிலிருந்து துரத்தப்பட்டார்கள். ஒரு ஆங்கில சேனைவந்து ரங்கூனைப் பிடித்துக்கொண்டு விட்டது. மழையாரம்பத்தில் நோய் அதிகப்பட்டு ஆங்கில சேனை அதிக கஷ்டப்பட்டது. ஆகஸ்டுக்கும் நவம்பருக்கு மிடையில், மர்குவி, தாவாய், மார்டபான், பெகு இவைகள் பிடிபட்டன. நோயினால் ரங்கூனிலிருந்த சேனை மெலிவுபட்டது. டிசம்பர் மாதத்தில் மகாபந்தூலா என்னும் யுத்தத் தலைவன் ஆங்கிலேயரை ரங்கூனைவிட்டுத் துரத்த, அவன் 60,000 பேருடன் கூட ஆங்கிலேயரைச் சுற்றி வளைந்து எதிர்த்தான். ஆனால் பர்மரில் வெகு பேர்கள் கொல்லப்பட்டுப் பாக்கிப்பேர்கள் முறியடிக்கப்பட்டார்கள். மகா பந்தூலா சேனையுடன் டனப்யூ என்னுமிடம் சென்று அங்கே யுத்தத்திற்குவேண்டிய ஆயதங்கள் எல்லாம் செய்துகொண்டிருந்தான். 1825 ௵ எப்ரல்௴ 2௳ டனப்யு பிடிபட்டும் மகாபந்துலாவும் யுத்தத்தில் கொல்லப்பட்டான். அதேநாளில் புரோமும் பிடிபட்டது.

1826-௵ பிப்ரவரி௴ ஆங்கிலேயர் பட்டணங்களை ஒவ்வொன்றாகப் பிடித்துக்கொண்டே, யாண்டபூ வரையில் சென்றார்கள். இங்கே பர்மருக்கும் ஆங்கிலேயருக்கும் ஒரு உடன்படிக்கை நடந்தது. பர்மர்கள் ஆஸாமையும், தெனாசரீம் கடற்கரையோரத்தையும் ஆங்கிலேயருக் களிப்பதாயும் யுத்தச் செலவுக்காக ஆங்கிலேயருக்கு 10 லக்ஷம் பவுன் கொடுப்பதாகவும் ஒப்புக்கொண்டார்கள். அந்த வருஷம் முடியவும் ரங்கூன் ஆங்கிலேயர் கையில் இருந்தது. அரக்கான் மாகாணம் பங்காள ராஜ்யத்தின் ஒரு பாகமாகவிருந்தது. மோல்மீன் தெனாசரீம் மாகாணத்திற்கு தலை நகரமாக்கப்பட்டது. 1830-௵ல், ஆவாவில் ஒரு ஆங்கில ஸ்தானாதிபதி நியமிக்கப்பட்டான். 1852௵, ரங்கூனை ஆண்ட பர்மா கவர்னர், ஆங்கிலேய குடிகளை அக்கிரமமாக நடத்தினான். அதை முறையிட்டுப் பார்த்தும் கேள்வியில்லாமையால், 1852௵ல், திரும்பவும் பர்மரோடு யுத்தம் ஆரம்பிக்கப்பட்டது. அதே வருஷத்தில், லார்ட் டல்ஹௌஸி பெகு

மாகாணம் முழுவதும் ஆங்கிலேயருடையது என்று அறிக்கைப்பத்திரம் அனுப்பிவிட்டார். இதற்குக்கொஞ்சநாள் பிறகுதான் மீண்டான்மீன் என்னும் மன்னன் பாக்கியிருந்த தேசத்திற்கு அரசனாகி ஒழுங்காக ஆண்டுவந்தது. 1862-ம் வருஷத்தில் அரக்கான், பேகு, மார்ட்டபான், தெனசரீம் மாகாணங்களை பிரிட்டிஷ் பர்மா என்னும், ஒரு ராஜதானியாக்கி அதை ஆண்டுவர ஒரு சீப் கமிஷனரும் நியமிக்கப்பட்டார்.

1867-ம் வருஷத்தில் வியாபாரவிஷயமாகவும், குற்றவாளிகளைத் திருப்பி அனுப்பும் விஷயத்தைப் பற்றியும், ராஜ்யவிவகாரங்களைப் பற்றியும், ஆங்கிலேயருக்கும் மிண்டான்மின் அரசனுக்கும் ஒரு உடன்படிக்கை நடந்தது. 1878-ம் வருஷத்தில் மிண்டன் மன்னன் இறந்து அவன் மகன் தீபா பட்டத்திற்கு வந்தான். 1879-ம் வருஷத்தில் ராஜவம்சத்தைச் சேர்ந்தவர்கள் அநேகம்பேர்களை தீபா கொலை பண்ணிய விஷயம் காதில் விழுந்தது. நாளுக்குநாள் தீபா, அக்கிரமத்தில் விருத்தியாகி வந்ததுமன்றி ஆங்கில ஸ்தானாதிபதியை, அவனும் அவனுடைய உத்தியோகஸ்தரும் அவமதித்து வந்தார்கள். 1879-ம்வருஷ அக்டோபர்மீத்தில் ஸ்தானாதிபதிக்கு தீபாவின் நடத்தை திருப்திகரமா யிராமையால் அவன் மாண்டலேயை விட்டு வரவேண்டியதாயிற்று. தீபாவின் கொடுமையால் தூரவிருந்த பர்மா கவர்னர் எல்லோரும் அவனுக்கடங்காமலே தங்களிஷ்டப்படி செய்துவந்தார்கள். பர்மா ராஜ்யத்திலிருந்து அநேக குடிகள் பிரிட்டிஷ் பர்மாவுக்குள் ஓடிவந்து விட்டார்கள். இராச்சியத்தின் எல்லைகளிலும் ஒரே குழப்பமாகவிருந்தது. வியாபார விஷயமாய் செய்துகொண்ட உடன்படிக்கையை தீபா உதாசீனப்படுத்தினான். 1882-ம் வருஷத்தில் உடன் படிக்கையைப்பற்றி ஒரு முடிவுக்கு வரும்பொருட்டு ஸிம்லாவுக்கு ஒரு ஸ்தானாதிபதி யனுப்பப்பட்டான். காரியம் முடிவுபெறுவதற்குள் தீபா அவனைத் திரும்பிவரும்படி ஆஞ்ஞாபித்தான். இட்டாலி, பிரான்ஸ் தேசத்து பிரதிநிதிகளை தீபா யேற்றுக்கொண்டு ஐரோப்பாவிலுள்ள இதரதேசத்தாரோடு உடன்படிக்கை செய்துகொண்டு வரும்படி இரண்டு தூதர்கள் தனித்தனி அனுப்பப்பட்டார்கள். 1885-ல் பர்மா ராஜாங்கத்தார் பாம்பே பர்மா வியாபாரக் கூட்டத்தின் மேல் 23-லக்ஷம் ரூபாய் அபராதம் விதித்தார்கள். இருகக்ஷிக்கும் பொதுவான மத்தியஸ்தரால் வியாஜ்யம் விசாரிக்கப்படட்டும் என்று ஆங்கிலேயர் சொல்லியும் தீபா அதை லக்ஷியம் செய்யவில்லை. வியாபாரக் கூட்டத்தின்மேலிருக்கும் கேசை நிறுத்தும்படியும் ஆங்கில ராஜப் பிரதிநிதியிடமிருந்து ஒரு தூதை இந்தியாராஜ்யத்துக்கு செலுத்தவேண்டிய மரியாதையுடன் ஏற்கும்படிக்கும், இந்தியா கவர்ன்மெண்டார் ஆலோசனைப்படி இதர நாடுகளோடு வர்த்தமானங்கள் நடத்தும்படிக்கும் ஒரு முடிவு எச்சரிக்கை ஆங்கில ராஜப்பிரதிநிதி 1885-ம் வருஷம் அக்டோபர்மீ 22உ தீபாவுக்கு அனுப்பினார். இதற்கு நவம்பர்மீ 9உ தீபா ரங்கூனுக்கு பதில் அனுப்பினான். மேற்சொன்ன விஷயங்களில் ஒன்றையாவது அவன் ஒப்புக்கொள்ளவில்லை. நவம்பர்மீ 7உ தீபா ஆங்கிலேயரை எல்லாம் பர்மாவை விட்டுத் துரத்திவிடும்படியாக தன் குடிகளுக்கு கட்டளையொன்று அனுப்பி இருந்தான். நவம்பர்மீ 15உ ஆங்கிலேயர் தங்கள் எல்லையைத் தாண்டி மாண்டலேயின்மேல் படையெடுத்துச் சென்றார்கள். 26உ ஆவா போய்ச் சேர்ந்தார்கள். அங்கு தீபாவிடமிருந்து ஒரு தூதன்வந்து தன் அரசன் ஆங்கிலேயருக்கு வணங்கச் சம்மதிப்பதாகச் சொன்னான். 28உ ஆங்கிலேயர் மாண்டலேயைப்போய்ப்பிடித்தார்கள். மறுநாள் தீபா அரசனைப்பிடித்து ஐராவதி ஆற்றின் வழியாக ரங்கூனுக்கு அனுப்பி அங்கிருந்து இந்தியாவுக்கு அனுப்பிவிட்டார்கள். 1886 வருஷ ஜனவரிமீ 1உ முதல் மேல்பர்மாவும் ஆங்கில ராஜ்யமாயிற்று. 1889-ம்வருஷ வரையில் சில கொள்ளைக்காரக் கூட்டத்தார் கவர்ன்மெண்டாருக்கு இம்சை கொடுத்துவந்தார்கள். அவர்களை எல்லாம் நாசப்படுத்தியபின் அதாவது 1890-ம்வருஷமுதல் மேல்பர்மா விருத்தியாகிக்கொண்டே வருகிறது.

ஆட்சி:—மேல் பர்மாவும் கீழ்பர்மாவும் இப்பொழுது ஒரு லெப்டினண்டு கவர்னரால் ஆளப்பட்டு வருகிறது. இரண்டு மாகாணமும் எட்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பிரிவின் தலைவருக்கும் கமிஷனர் என்று பெயர். இந்த எட்டு பிரிவுகளிலும், 37 ஜில்லாக்களிருக்கின்றன. அவை ஒவ்வொன்றையும் ஒரு டிபியுடி கமிஷனர் (இவர்கள் நம்முடைய கலெக்டர்களுக்கு சமானம்) ஆளுகிறார். இவற்றைத்தவிர ஷான்நாடுகளும் சின்மலைநாடுகளும் சிறு கூட்டத்தலைவரால் ஆளப்

பட்டுவருகின்றன. இவர்களுக்கு ஸாப்வா அதாவது சிற்றரசர்கள் என்று பெயர். ஆனால் உண்மையில் அவைகள் அங்கிருக்கும் ஆங்கிலேய சூப்பரின்டெண்டுகளால் ஆளப்பட்டுவருகின்றன.

கீழ்பர்மாவுக்கு முக்கிய பட்டணம் ரங்கூன். மேல் பர்மாவுக்கு முக்கிய பட்டணம் மாண்டலே. பட்டணத்திலிருந்து பர்மாவில் எந்த ஊருக்கு வரவேண்டுமானாலும் ரங்கூனில்தான் வந்து இறங்கிச் செல்லவேணும். ஏனெனில் அகியாப், பாசீன், மோல்மீன், தாவாய், மர்க்குவி முதலிய அநேக துறைமுகங்களிருந்தபோதிலும் கப்பல் ரங்கூனில்தான் வந்துநிற்கும். மற்ற இடங்களுக்குச் செல்லாது.

போக்குவரவு சாதனங்கள்:—பர்மாவில்போக்குவரவு சாதனங்கள் மண்பாதை, ரயில்வே, ஐராவதியாறு ஆகிய மூன்றுவகை. ரஸ்தாரோட்டு மார்க்கம் சில பெரிய பட்டணங்களில் தவிர, மற்ற இடங்களில் மண்பாதை மிக்க கெடுதலாயிருக்கும். மழைநாட்களில் அப்பாதைகளில் நடப்பது அசாத்தியம். ரங்கூனிலிருந்து ஒரு ரயில்பாதை புரோமுக்கு ஓடுகிறது. மற்றொன்று ரங்கூனிலிருந்து மாண்டலே போய் அங்கிருந்து சகாயிங்குக்கு திரும்பி வடக்கே மியிச்சினா வரையில் செல்லுகிறது. பாசீனுக்கும் மோல்மீனுக்கும் ரயில்பாதைகள் போடப்பட்டிருக்கின்றன. ஐராவதி நதியினால் பர்மாவுக்கு ஏற்பட்டிருக்கும் பிரயோஜனம் மிகவும் ஜாஸ்தியானது. அது முக்கிய போக்குவரவு சாதனமாயிருப்பதுமன்றி வியாபாரத்திற்கு இன்றியமையாத மார்க்கமாகவும் இருக்கிறது. ஐராவதீ ப்ளோட்டில்லா கம்பனிதங்கள் சிறுபுகைக் கப்பல்களை பாமோ வரையில் ஓட்டுகிறார்கள். இதுவன்றி அநேக படகுகளும் பர்மர்களுடைய சிறு பிணைகளும் அவ்வாற்றில் மிதந்து கொண்டே இருப்பதைக் காணலாம். சிட்டாங் நதியில் கப்பல்கள் போவதில்லை

ஆனால் மேல்தேசங்களிலுள்ள காடுகளிலிருந்து தேக்குமரங்களை வெட்டி இந்நதியில் மிதக்கவிடுவார்கள். எந்த ஊருக்கு அனுப்பப்பட்டிருக்கிறதோ அந்தவூர்க்காரன் மரங்களை இழுத்துப்போவான். அன்றியும் பெகு சிட்டாங் ஆறுகளை ஒரு கால்வாய் பிணைக்கிறது. ஆதலால் தேக்குமரங்களை சிட்டாங்கிலிருந்து ரங்கூனுக்கு ஜலமார்க்கமாகவே கொண்டுவரலாம். இராப்பகலாய் இவ்வாறுகளில் ஏற்றுமதிகள் இறக்குமதிகள் நடந்துகொண்டேயிருக்கும். மேல் பர்மாவில் விளையும் நெல் எல்லாம் இவ்வாறுகளின் வழியாகத்தான் படகுகளில் ரங்கூனுக்குக் கொண்டுவரப்படுகின்றது. ரங்கூனிலும், மோல்மேனிலும், பாசீனிலும் யந்த்ரசாலைகள் அநேகமிருக்கின்றன. இவற்றில் நெல்லை அரிசியாக்கியும், தேக்குமரங்களைப் பிளந்தும் இதர தேசங்களுக்கு ஏற்றுமதிசெய்வார்கள். ரங்கூனை விட இரண்டுபங்கு அதிகமழை இப்பிரதேசங்களில் பெய்கிறது. பர்மாவில் நவம்பர் மாதமுதல் மார்ச்சுமாதம் வரையில் குளிர்காலம். மார்ச்சு மாதமுதல் ஜூன்மாதம் வரையில் கோடைகாலம். ஜூன் முதல் நவம்பர் வரையில் மழைகாலம். மழை அதிககாலம் பெய்வதாலும் அது ஏராளமாகக் கொட்டுவதாலும் பர்மாதேசமெங்கும் காடுகளைப் பார்க்கலாம். மற்ற தேசங்களைவிட பர்மாவில் தேக்கு அதிகமாய் விளையும். மூங்கில்தான் பர்மர்கள் வீடுகட்டுவதற்கு முக்கியமாய் உபயோகப்படுத்துவார்கள். பூமி மிக்க செழிப்புள்ளதாதலால் மரங்கள் மிக்க விசாலமாகவும் உயரமாகவும் இருக்கும். இன்னும் கட்டப்பர்ச்சா என்னும் ரப்பர் கொடுக்கும் மரங்களும் பியின்காடோ, தீட்யா முதலிய விருக்ஷங்களும் உண்டு. பலா, கொய்யா, டேரியன், மங்குஸ்தீன், அநாஸ் முதலிய பழங்கள் ரங்கூன் கடையில் அபரிமிதமாக காடுகளினின்றும் கொண்டுவரப்பட்டு கிடப்பதைக் காணலாம். பர்மாவில் அதிகமாக விளையும் தானியம் நெல்லேயாம். இதர தானியங்களையும் பயிரிடுவதுமுண்டு.

மண்ணெண்ணெய் பர்மாவிலிருந்து ஏராளமாக அனுப்பப்படுகிறது. இது முக்கியமாய் ஏனாஞ்சியாங் என்னும் ஊரின் சுற்றுப்புறங்களிலுள்ள கிணறுகளில் அகப்படுவதால் மண்ணெண்ணெய்க்கு பர்மாவில் ஏனாஞ்சி எண்ணெய்யென்றே பெயர். இந்த எண்ணெய் ருஷியா எண்ணெய், அமெரிக்கா எண்ணெய்யைப்போல அவ்வளவு சுத்தமும் தெளிவுமுள்ளதன்று. இதைத்தான் சுதேசி எண்ணெய் என்று பட்டணத்தில் விற்கிறார்கள். மெழுகுவர்த்தி பர்மாவில் ஏராள



மாய் செய்யப்படுகின்றன. கோவில்களிலெல்லாம் மெழுகுவர்த்திகளைத்தான் நிரம்ப உபயோகப்படுத்துவார்கள். நமது கோவில்களுக்கு நெய்யோ நல்லெண்ணெயோ கொண்டுபோய் நாம் விளக்கேற்றுவதைப்போல் பர்மா கோவில்களுக்கு மெழுகுவர்த்தி வாங்கிப்போய் ஏற்றிவிட்டு வரவேண்டும். கார்த்திகைக்கு நாம் அகல்வாங்கி ஏற்றுவதுபோல் பர்மர்கள் பண்டிகைக்கு மெழுகுவர்த்தி வாங்கி வீடெங்கும் ஏற்றி வைப்பார்கள். சிவப்பு ரத்தினங்களும், பச்சை ரத்தினங்களும், ரூபிமைன்ஸ் என்னும் ஜில்லாவில் வெட்டி எடுக்கப்படுகின்றன. ஆறுகளில் அடித்துக்கொண்டு வருவதுமுண்டு. இன்னும் வெள்ளி, ஈயம், பொன், தகரம், இவைகளும் அநேக இடங்களில் அகப்படுகின்றன. மர்குயித்தீவுகளில் முத்துக்குளிக்கிறார்கள்.

கைத்தொழில்:-முக்கியமாய் மரவேலை, தந்தவேலை, சலவைக்கல் வேலை, இவற்றில் பர்மர்கள் சிறந்தவர்கள். நமது பழுக்காத்தட்டுகளும், டப்பிகளும், பர்மாவில் ஏராளமாகச் செய்யப்படுகின்றன.

வியாபாரம்:-ஐரோப்பிய தேசங்களோடும், அமெரிக்காவின் ஐக்கியமாகாணத்தோடும் இந்தியா, சீனா, ஜப்பான், சிங்கப்பூர், நாடுகளோடும் வியாபாரம் நடந்துவருகிறது. முக்கியமாய் ஏற்றுமதியாகும் பொருள்கள் தேக்குமரம், அரிசி, தோல் இவைகளேயாம். கடற்கரை யதிகநீளமாயிருப்பதால் வெளிநாட்டுவியாபாரமேஜாஸ்தி. சீனாவோடு உள்நாட்டுவியாபாரமும் செய்யப்படுகிறது. காடுகளில், யானை, புலி, சிவிங்கி காடுகளிருப்பதால் உள்நாட்டு வியாபாரிகள் அதிக ஜாக்கிரதையாகச் செல்லவேண்டும். பூர்வகாலத்தில் பர்ம அரசர்கள் வெள்ளையானைகளை வைத்து அவற்றை மிக்க செல்வமாய் சம்ரக்ஷித்து வந்தார்கள்.

ஜனங்கள் நடவடிக்கைகள்:—பர்மாவின் ஜனத்தொகை சுமார் 90-லக்ஷம். பலவித நாகரீகமும் நடையுடை பாவனைகளுமுடைய ஜனங்கள் பர்மாவில் இருக்கிறார்கள். ரங்கூனில் உலகிலுள்ள பலதேச ஜனங்களையும் காணலாம். ஆனால் பர்மா பாஷைதான் வெகு பேர்களுக்குத் தெரிந்த பாஷை. பௌத்தமதம் தான் முக்கியமாய் அனுசரிக்கப்பட்டு வருகிறது. அநேக பெரிய கோவில்களையும், மடங்களையும் பர்மாவில் காணலாம். "கோவிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்பது பர்மாவில் பிரத்தியக்ஷம். ஒரு சிறு கிராமத்திலும் ஒரு சிறு கோவிலைக்கட்டி அதில் ஒரு புத்த விக்கிரத்தை வைத்திருப்பார்கள். பொஞ்சிகளுக்காக மடமும் பிரத்தியேகமாக கட்டப் பட்டிருக்கும். இந்த பொஞ்சிகள் நமது தேசத்து சந்நியாசிகளைப்போல் முண்டனம் போட்டுக் காஷாயம் தரித்திருப்பார். இவர்கள் இரந்துதானுண்ணவேண்டும். இவர்களிடத்தில் பர்மாக்காரர்களுக்கு அதிக மதிப்பும் விசுவாசமும் உண்டு. இவர்களை பர்மாவில் எங்குபோனாலும் ஏராளமாய்க் காணலாம். நமது தேசத்தைப்போல ஸ்திரீகள் வீட்டிற்குள்ளேயே பர்மாவில் அடைபட்டிருப்பதில்லை. அவர்களுக்கு சுதந்தரம் நிரம்பஉண்டு. அவர்கள் ஐரோப்பிய மாதர்கள்போல எந்த புருஷனிடத்திலும் பேசலாம்.

பர்மர்கள் அயலாரிடத்தில் விசுவாசமும் மரியாதையுமுடையவர்கள். அவர்களுக்கு சிக்கன சீவனமென்பதே தெரியாது. கையில் அகப்பட்டதை நாளைக்கு வேண்டுமென்னும் யோசனையின்றி, கரைத்து விடுவார்கள். இவர்கள், சீனர் இந்தியர்களைப்போல் உழைப்பாளிகளுமல்ல. சுகமாய்ப் பொழுதைக்கழிக்க விரும்புவார்கள்.

## நீலி வசீகரம்

### TAMING OF THE SHREW

(முன் தொடர்ச்சி)

---

நா.—சந்தோஷமாகவிரு ; இதோ பார், கௌதமி ! உனக்காக மிகுந்த சிரமப்பட்டு நானே சமையல் செய்துகொண்டு வந்திருக்கிறேன். (பாத்திரத்தைக் கீழேவைத்தல்) என்ன சோது ? எவ்வளவு சிரமப்பட்டேன் தெரியுமா ?—ஏன் இவ்வளவு சிரமமென்று ஒரு அநுதாப வார்த்தைகூடச் சொல்லமாட்டாயா ? அப்படியானால் என்மீது உனக்கு அன்பு இல்லைபோலும் ! இவ்வளவு சிரமப்பட்டதும் வீணா ? யாரடா அங்கே ? இந்தச் சோற்றை யெடுத்துப்போங்கள்.

கௌ.—ஐயே ! வேண்டாம், வேண்டாம் ; இங்கேயே இருக்கட்டும் உங்கள் சிரமத்துக்காகக் காலில் வேண்டுமானாலும் விழுகிறேன் ; பசி உயிர் போகின்றது.

பிர.—தேவரே ! கொஞ்சம் பொறுங்கள் ; அவள் சாப்பிட்டுப் பசியாறட்டும்.

நா.—ஆனால் சாப்பிடு சீக்கிரம் ;—கண்மணி கௌதமி ! சாப்பிட்டவுடன் உன் பிறந்தகத்துக்குப் புறப்படவேண்டும். சாப்பிட்டாய்விட்டதா? ஜவுளிக்கடைக்காரன்காத்துக்கொண்டிருக்கிறானே, நல்லபுடைவை கொண்டுவந்திருக்கிறான்.

(புடைவைக்காரன் வருதல்)

பு.—ஐயா ! நமஸ்காரம்.

நா.—நீதான் புடைவைக்காரனோ ? அன்றையதினம் நான் சொல்லியபடியே புதுப்புடவை செய்து கொண்டுவந்திருக்கிறாயா ?

பு.—இதோ இருக்கிறது ; பிரித்துப் பார்க்கிறீர்களா? (பிரித்துக்காட்டல்.)

நா.—ஐயையோ ! என்னடா, இப்படி செய்துவிட்டாய்? ஒருபக்கம் அரக்குக்கரையும் இன்னொரு பக்கம் மஞ்சள் கரையுமாகவா செய்கிறது ? நன்றாகவேயில்லை ; இது வேண்டாம்.

கௌ.—அதுதான் நன்றாகவிருக்கும். எனக்கு இதுதான் வேண்டும்.

நா.—இதில் ஜரிகை அதிகமாக விருக்கிறது. சீக்கிரத்தில் சுருங்கிப் போய்விடும் ; மேலும் சாயங்கூட நிற்காது. உனக்கு வேறு வாங்கித்தருகிறேன். இது வேண்டாம்.

கௌ.—எனக்கு இதுதான் வேண்டும். ஸ்திரீகளின் உடை நோட்டம் புருஷர்களுக்கு எப்படித் தெரியும் ; எனக்கு இதைத்தான் வாங்கிக் கொடுக்கவேண்டும். இல்லாதபோனால் எனக்குக் கோபம் வரும்.

(தையற்காரன் வருதல்)

தை.—ஐயா ! நீங்கள் சொல்லியபடியே அம்மாளுக்கு ' ரவிக்கை ' தைத்துக்கொண்டு வந்திருக்கிறேன்.

நா.—ஏதோ, இப்படிக்கொடு (வாங்கிக்கொண்டு) இதென்னடா, கேவலம் ? உள்ளுக்கு ஒரு துணி ஏன் கொடுத்தாய் ? மேல் ஜரிகை வைத்திருப்பது நன்றாக விருக்கவில்லை. "வெல்வெட்" துணிகூட நல்ல தினிசு இல்லைபோல விருக்கிறது.

தை.—இல்லை, எஜமானரே ! தாங்கள் சொன்னதில் எள்ளளவேனும் பிசகாமல் செய்திருக்கிறேன். துணியும் தங்கள் சேவகர்தான் வாங்கித் தந்தார்.

நா.—நன்றாகவேயில்லை.

கௌ.—இதைக்காட்டிலும் நன்றாக யார் தைத்துக் கொண்டுவருகிறார் ? இதுவே மேலானது ; இது தான்எனக்கு வேண்டும்.

பிர.—(தனக்குள்) — சரி ; இவளுக்குப் புடவையும் கிடைக்காது, ரவிக்கையும் கிடைக்காது.

நா.—நீ என்ன குழந்தையா ? நல்லது இன்னதென்றும், கெட்டது இன்னதென்றும் அறிந்துகொள்ள முடியாதா, உன்னால் ?

தை.—ஐயனே ! இது நல்லதாயிற்றே !

நா.—சீ ! காமாட்டிப் பையலே ! ஓடிப்போ ; என் வீட்டில் வந்து நின்றுகொண்டு எனக்குப் பாடம் படிக்கிறாயோ ? உன் ரவிக்கையும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம் ; நீ உடனே போய்விடு.

தை.—ஐயா ! தாங்கள் சொன்னபடிதானே செய்திருக்கிறேன். இதில் குற்றமொன்றுமில்லையே.

நா.—நீ என்னவேண்டுமானாலும் சொல்லிக்கொண்டிரு ; இந்த ரவிக்கை எனக்கு வேண்டாம்.

போ.—ஐயா ! அது தங்களுக்கன்று ; எஜமானியம்மாளுக்காக வந்திருக்கிறது.

நா.—சீ ! போக்கிரிப்பையலே ! பேசாமலிரு. (பிரதாபருத்திர தேவருடன் தனிமையில்) நீர் பணங்கொடுக்கிறதாகச் சொல்லும், புடவைக்கும் ரவிக்கைக்கும் (தையற்காரனைநோக்கி) உன் ரவிக்கை எனக்கு வேண்டியதில்லை. ஏ, புடவைக்காரா !

உன் புடவையும் எனக்கு வேண்டியதில்லை; நீங்கள் போகலாம் ; நிற்பதில்பிரயோஜனமில்லை.

பிர.—புடவைக்காரரே! உமது புடவை நன்றாகவிருக்கிறது ; அதை நான் எடுத்துக்கொள்ளுகிறேன் ; பணத்துக்கு நாளைவாரும். ஓய்! தையற்காரரே! உமக்கும் அப்படித்தான் ; ரவிக்கையை நான் வாங்கிக்கொள்ளுகிறேன். தேவர் சொன்னதைப்பற்றி நீங்கள் மனவருத்தப்படவேண்டாம்.

(தையற்காரனும் புடவைக்காரனும் போதல்.)

நா.—இங்கேவா, கோது ; உன் பிறந்தகத்துக்கு இந்தத் தாழ்ந்த உடையோடு போனால் என்ன ? அதனால் யாராவது, நாம் ஏழைகள் என்று நினைப்பார்களென்று சந்தேகப்படுகிறாயோ? பட்டால் படட்டும் ; அதனால் நமக்கு என்ன குறை? நம் செல்வம் குறைந்துவிடாது ; புலியும் நல்ல பாம்பும் வெளிக்கு வெகு பகட்டாய் அழகுடன் தோன்றுகின்றன ; அவைகளை யாவரேனும் கொண்டாடுகிறார்களா ? உனக்கு வெட்கமாகவிருந்தால் என்னைக் காட்டிக்கொடுத்துவிடு ; பதில் நான் சொல்லிக்கொள்கிறேன். நாம் உடனே புறப்படவேண்டும் ; சேவகர்களைக் கூப்பிடு. இப்போது மணி ஏழு ஆகிறது. மத்தியானச் சாப்பாட்டுக்கு நாம் போய்விடலாம், வேகமாய்ப் போனால்.

கௌ.—இப்போது மணி இரண்டாய்விட்டதே இப்போது புறப்பட்டால் நாம் போய்ச் சேருவதற்குள் இருட்டிவிடும்.

நா.—அதென்ன ? நான் என்ன சொன்னாலும் தடுக்கிறாய்! நான் மணி ஏழு என்கிறேன்; நீ இரண்டு என்கிறாய்;இந்த மாதிரி குறுக்கே தடுத்துச்சொல்லாதே என்று எத்தனை தரம் சொல்லியும் நீ கேட்கவில்லையே. ஒன்றும் வேண்டாம் போ; நான் இன்றைக்குப் புறப்படவில்லை. நான் எந்நேரமாயிற்று என்பேனோ, அந்நேரமானால்தான் நான் புறப்படுவேன்.

பிர.—சரி! சரி! இவர் நிச்சயம் இவளை வழிக்குக் கொண்டுவந்துவிடுவார்; சந்தேகமில்லை.

(அனைவரும் போதல்).

களம் 4.—மதுரை ரகுநாத தேவரின் வீட்டு முன் பக்கம்.

(சுப்பராயனும், நல்ல நாயக உடையார் வேஷம் பூண்ட தீர்த்தயாத்திரியும் வருதல்)

சுப்.—இந்த வீடுதான்; நான் உள்ளேபோய்க்கூப்பிட்டுக்கொண்டு வரட்டுமா ?

தீர்.—சரி ; கூப்பிட்டுக்கொண்டுவா; ரகுநாததேவரும் நானும் இருபது வருஷங்களுக்கு முன்னால் திருவனந்தபுரத்தில் ஊட்டுப்புரையில் சாப்பிட்டோம் ; அந்த ஞாபகம் எனக்கு நன்றாகவிருக்கிறது.

சுப்.—எப்படியாவது தைரியத்தைவிடாமல் காரியத்தை முடித்துவிடும்.

தீர்.—எனக்கு ஒன்றும் சொல்லவேண்டியதில்லை. ஆனால் இதோ உன் சேவகன் வருகிறான், அவனுக்கு இவ்விசேஷத்தைச் சொல்லிவிட்டால் நல்லது.

(கேசவன் வருதல்)

சுப்.—அதைப்பற்றி பயப்படவேண்டாம்.—ஏலே! கேசவா! இதோ இருப்பவர், நிஜமான நல்லநாயக உடையாரென்று நினைத்து நடக்கவேண்டும் ; தெரியுமா ?

கே.—அப்படியே நடக்கிறேன் ; சந்தேகம் வேண்டாம்.

சுப்.—ஆமாம் ; ரகுநாத தேவரிடம் அந்த சங்கதியைச் சொல்லிவிட்டு வந்தாயா ?

கே.—அவரிடம் உன் தகப்பனார் இன்றையதினம் இவ்வூருக்கு வருவாரென்று சொல்லிவிட்டேன்.

சுப்.—நீ எப்போதும் முன் யோஜனைக்காரன் ; நீ ஏதாவது வாங்கிச்சாப்பிடு, இதைக்கொண்டு இதோ ரகுநாததேவர் வந்துவிட்டார்.—ஐயா! ஜாக்கிரதை.

(ரகுநாததேவரும் விஜயராகவ உடையாரும் வருதல்.)

ஐயா தேவர்வாள்! உங்களைத்தான் தேடிக் கொண்டு வந்தோம். (தீர்த்தயாத்திரியை நோக்கி) ஐயா! இவரைத்தான் நான் குறிப்பிட்டது. அவருடைய பெண் வசீதேசுவரியை நான் கல்யாணம் பண்ணிக்கொள்வதற்கு நீங்கள் சம்மதித்துவிட்டால் போதும்.

தீர்.—பையா! போதும்.—ஐயா! நான் இன்றுகாலையில்தான் இங்கு வந்தேன். சில கடன் வசூல் செய்யவேண்டியதற்காக வந்தவிடத்தில் என் மகன் பெரிய விஷயமொன்றை என்னிடம் சொன்னான்; அதாவது தங்களுடைய குமாரத்தியைக்கல்யாணம் பண்ணிக்கொள்ளவேண்டுமென்கிறான்; எனக்கு மிகுந்த சந்தோஷம் ; நல்ல இடத்து சம்பந்தம் கிடைப்பது அருமையல்லவா ? நீங்கள் என்ன செய்யவேண்டுமென்று சொல்லியபோதி

னும், நான் அதற்கு உடன்படுகிறேன்.

ரகு.—நீங்கள் சொல்வது எனக்கு மிகுதியும் திருப்தியைக் கொடுத்துவிட்டது; என் மகளுக்கும் உங்கள் மகனுக்கும் அத்தியந்த அந்நியோந்நியம் இருக்கிறதென்று தெரிகின்றது. தாங்கள், பெண்ணுக்கு எவ்வளவு ரூபாய் கொடுப்பீர்கள்? இதை முடித்துவிட்டால் கல்யாணத்துக்கு முகூர்த்தம் வைத்துவிடலாம்.

தீர்.—அதையெல்லாம் நன்றாய் யோஜித்துச் சொல்லவேண்டும்; அதற்கு ஓரிடத்தில் உட்கார்ந்து பேசவேண்டும். இங்கேயே உள்ளேபோவோமா?

ரகு.—இங்கே சரிப்படாது; பொன்னம்பலத்தேவர் வந்து குறுக்காகப் பேசுவார். வேறு இடம் பார்க்கவேண்டும்.

சுப்.—ஆனால் என் விடுதிக்கு வந்துவிடுங்களேன். அய்யாவும் அங்கேதான் இறங்கியிருக்கிறார்; ராத்திரி அங்கேயிருந்து பேசி முடித்துவிடுவோம். யாரேனும் ஒரு சேவகனையனுப்பி வசிதேசுவரியை அழைத்துவரச் செய்யுங்கள்; திருப்திகரமாகப்பேசித் தீர்மானம் செய்துவிடுவோம்.

ரகு.—அதுதான் சரியென்று தோன்றுகிறது—சாமிநாத வாத்தியாரே! நீர் போய் குழந்தை வசிதையிடம் சமாசாரங்களையெல்லாம் சொல்லி அழைத்து வரவேண்டும்.

விஜ.—ஆயிரந்தரம் வேண்டுமானாலும் போய் வருகிறேன்.

சுப்.—ஒருதரம் போனால் போதும்; சீக்கிரம் போம்; ஐயா! வாருங்கள். நாம் போகலாம்.

(சுப்பராயன், தீர்த்தயாத்திரி, ரகுநாத
தேவர் மூவரும் போதல்)

---

### பராபரக்கண்ணி

ஓடு மிருவிதியு மொன்றாகக் கண்டவர்க
ளூடும் பொருளான நட்பே பராபரமே.
ஓயாதோ வென்கவலை யுன்னை யானந்தவெள்ளம்
பாயாதோ வையா பகராய் பராபரமே.
கன்றினுக்குச் சேதாக னிந்திரங்கல் போலவெனக்
கென்றிரங்கு வாய்கருணை யெந்தாய் பராபரமே.
எண்ணாத எண்ணமெல்லா மெண்ணியெண்ணி
யேழைநெஞ்சம், புண்ணாகச் செயதினிப்
போதும் பராபரமே.
ஆழித் துரும்பெனவே யங்குமிங்கு முன்னடிமை
பாழிற் றிரிவதென்ன பாவம் பராபரமே.
கற்றவறி வாலுனைநான் கண்டவன்போற் கூத்தாடிற்
குற்றமென் றென்னெஞ்சே கொதிக்கும் பராபரமே.

# இந்துலேகை

ஒரு மலயாள நாவல்

## இரண்டாம் அத்தியாயம்

---

(219-ம் பக்கத் தொடர்ச்சி)

இந்த ஸம்பாஷணை நடந்தபிறகு சிலநாள் வரையில் மாதவன் காலங்கழித்துவந்த விதத்தைப்பற்றிச் சொல்ல எனக்கே சங்கடமாயிருக்கிறது. இந்துலேகை தன்மனம்போனபடி எவ்வளவுதான் பேசினாலும் சிரித்தாலும் விளையாடினாலும் மாதவன் மாத்திரம் வாய்திறவாமல் மௌன முத்திரை தரித்தவன்போல் தோற்றினான். சிலசமயம் இந்துலேகை, "உனக்கென்ன சித்தப்பிரமை பிடித்திருக்கிறது?" என்று கேட்பாள். ஆனால் அதற்கவன் மறுமொழி சொல்லுமுன் இன்னும் எத்தனையோ கேள்விகேட்டு அவன் பிராணனை வாங்கிவிடுவாள். ஒரு நாள் சாயங்காலம் இந்துலேகை ஆடையாபரணங்களணிந்துகொண்டிருக்கையில் மாதவன் அவளிருந்த அறைக்குட் சென்று அங்கிருந்த ஒரு காகிதத் துண்டை எடுத்து அதில் தன் மனத்துயரங்களையெல்லாம் எழுதி நிறைத்து அந்தக் காகிதத்தை இந்துலேகையின் மேஜையின்மேல் வைத்துப் போய்விட்டான். அடுத்த நாள் சாயங்காலம் அவன் இந்துலேகையின் அறைக்குத் திரும்பிவந்து "நான் நேற்று ஒரு கடிதம் எழுதிவைத்துவிட்டுப் போனேனே, அதைப் படித்தையோ?" என்று கேட்க, அவள் அதைக் காதிற் போட்டுக்கொள்ளாமல் உடனே வேறே விஷயங்களைப் பற்றிப்பேசத்தொடங்கி, அவனுக்குண்டாயிருக்கக்கூடிய துயரத்தைத் தான் கண்டுகொண்டதாகக் காட்டிக்கொள்ளாதவளாய் அவனிடத்தில் தனக்கிருந்த காதலைத் தனக்குள்ளாகவே மறைத்துவைத்தாள்.

இப்படியிருக்கையில் ஒரு நாளிரவு பூர்ணசந்திரிகை பிரகாசித்துக்கொண்டிருக்க மாதவன் பூவரங்கு மாளிகையின் தெற்கு முற்றத்தில் நின்றுகொண்டிருந்தான். இந்துலேகை தன் மாளிகையின் பலகணிவழியாய்ப் பார்த்து மாதவன் நின்றுகொண்டிருப்பதைக்கண்டு "மாதவா, மாதவா" என்று கூப்பிட்டாள்.

"எதற்காக?" என்றுகேட்டான் மாதவன்.

"எதற்காகவா?" என்று மாதவன் கேட்டதையே இந்துலேகையும் திருப்பிச்சொல்லி "காம விகாரங் கொண்டவன்போல் சந்திரனைப் பழிக்கின்றா

யோ? சந்திரகிரணங்கள் இந்த அறையிலும் எவ்வளவு மனோஹரமாய் நிறைந்திருக்கிறது வந்து பார். இங்கேவர ஏதாவது ஆட்சேபமுண்டோ?" என்றாள்.

"நான்மேலே வரக்கூடாது" என்றான் மாதவன். "ஒரு ஸோபாவில் நாமிருவரும் ஒன்றாய் உட்காருவது அநுசிதமான காரியமாயிருக்கும் பட்சத்தில் நான் இராவுவேளையில் நீ இருக்கும் அறைக்கு வந்து அங்கே உன்னுடன் உட்காருவது இன்னும் அநுசிதமல்லவா?"

"நீ சொல்வது சரியே" என்று விடை பகர்ந்தாள் இந்துலேகை. "அது மிகவும் அநுசிதமாய்த் தானிருக்கும். நான் பேசினபோது அதை மறந்துவிட்டேன். நானே முற்றத்துக்கு இறங்கிவருகிறேன்."

"எனக்காக வேண்டி அவ்வளவு சிரமமெடுத்துக் கொள்ளவேண்டாம்" என்றான் மாதவன்.

"அப்படியில்லை. என் பொருட்டாகவே வருகிறேன்" என்றாள் இந்துலேகை.

"அப்படியானால் சரி" என்று மாதவன் உரைக்கவும், இந்துலேகை கீழே இறங்கிவந்து முற்றத்தில் வெகு மனோஹரமாய்ப் பிரகாசிக்கும் சந்திரிகையில் மாதவன் பக்கத்தில் நின்றாள். அவள் அன்று சாயங்காலம் கட்டித்தொடுத்த ஒரு முல்லைமாலை அவளது கையில்இலங்கிற்று. பால்போல் வெண்மைகொண்ட அந்தச் சந்திரிகை வெள்ளத்திலே மாதவன் அவளது திவ்யமான முகசௌந்தரியத்தையும் கூந்தலழகையும் ரூபலாவண்யத்தையும் கண்டு அடக்க முடியாத மோகபரவசமுற்று மயங்கி நின்றவனாய் "ஈசா! உன் படைப்பில்சிறந்த இந்த சுந்தரிக்கு என்னிடம் காதல் உண்டாயிருக்கும்பட்சத்தில், என்னைப் போலுள்ள பாக்கியவான் யார்? அப்படியில்லாவிட்டால் இந்த உயிரை வைத்திருப்பதில் என்ன பிரயோஜனம்? இக்கணமே அவள் காலண்டையில் உயிரை விடுவதும் உத்தமமாகுமே" என்று சிந்திக்கலாயினான்.

இந்துலேகைக்கும் ஆழ்ந்த காதலுணர்ச்சி யுண்டாயிற்றென்றாலும், அவள் தன் நடத்தையில் யாதொரு பேதத்தாலாயினும் தன் எண்ணங்கள் வெளியில் தெரிந்துவிடும்படியாய்காட்டிக்கொள்ள இடங்கொடுக்கவில்லை. இதன் சூட்சுமம் என்னவெனில், அவள் தன் மனதை முழுவதும் அடக்கித் தன்வசப்படுத்தி வைத்திருந்தபடியால், தன் மனோவிகாரங்களைப் பொங்கி யெழவொட்டாமல் இழுத்துப்பிடித்துத் தன் இங்கிதங்களில் அவைகளை லேசாய்வைத்துக்கொண்டுபோகக்கூடிய தந்திரத்தில்தேர்ந்திருந்தாள். ஆனால் உள்ளம்பூரித்து உல்லாசம் மேலிடுங்காலத்தில், நகைப்பே நம் மனோபாவங்களை வெளிப்படுத்துவதற்குரிய சகஜமான வழியாயிருப்பதும், துக்கம் மேலிட்ட தருணங்களில் சங்கடத்தை வாய்விட்டு வெளிப்படுத்துவதனாலேயேஅதன் தீவிரமான வேதனைகள் தணிவடைவதும் பிரத்தியக்ஷமாயிருக்கின்றன. துக்காக்கிராந்தனாயுள்ள ஒருவன் தன் சுகதுக்கங்களைத் தன்னுடன் அனுபவிக்கும் அன்பனுடைய செவிகளில் ஆறாய்ப்பெருகும்படித் திறந்த மடையாய் வாயாரச்சொன்னால்தான் சிறிது ஆறுதலுண்டாகிறது. அப்படிக்கின்றித் தன் நெஞ்சத்துக்குள்ளேயே வேதனையை அடக்கிக்கொண்டு உள்ளுக்குள்ளேயே உருகி வெதும்பி வெளிக்கு யாதொரு துக்கமும் இல்லாதவன்போல் இந்தப் பிரபஞ்சநாடகத்தில் நடிப்பானாயின், தடைப்படுத்தப்பட்ட வெள்ளம்போல் அவனுடைய மனோபாவங்கள் திடீரென்று உடைப்புண்டுப் பொங்கியெழுந்து அவனையும் தம் பிரவாகவேகத்தில் அடித்துக்கொண்டு போய்விடுகின்றன.

முற்றத்தில் வீசும் சந்திரிகையில் மாதவனுடைய மெல்லிய முகத்தில் ஸ்பஷ்டமாய்க் காணப்பட்ட வேதனையைக்கண்டு இந்துலேகையின் மனமும் தத்தளித்தது. சாதாரணமாகவேசந்திரிகையென்றால் மனதில் அடங்கியிருக்கும் மோக உணர்ச்சிகளெல்லாம் உத்தீபனம்கொள்ளும். அதிலும், அப்போது அவ்விடத்தில் பிரவகித்த சந்திரிகை வெள்ளத்திலே, மாதவனைப்போன்ற மன்மதரூபன்தான் அவனிடத்தில் எவ்வளவு அன்புவைத்திருந்தாளோ அவ்வளவு உண்மையும் லவிதமும் உறுதியுமான காதலைத் தன்னிடம் கொண்டவனாய்த் தான் சமீபத்தில் நிற்கும்போது அவளுக்குண்டான காமவிகாரத்தின் கூர்மையைச் சொல்லவும் வேண்டுமோ? அப்படியிருந்தும் அவள் தன் புத்தி சாமர்த்தியத்தைக்கொண்டும் பொறுமையாலும் தைரியத்தாலும் தன் மனோவேதனையைச் சிறிதேனும் காட்டிக்கொள்ளாதவளாயிருக்க அவ்விருவரும் சற்றுநேரம் மௌனமாய்ச் சந்திரனை உற்றுப்பார்த்துக்கொண்டு நின்றனர். கடைசியில் இந்துலேகை பின்வரும் சுலோகத்தைப் பாடினாள்

ஸ்வைரம் கைரவ கோரகாந்
விதளயந் யூநாம் மந: கேதயந்
அம்போஜாநி நிமீலயந்
ம்ருகத்ருசாம் மாநம் ஸமுந்மூலயந்

ஜ்யோதஸ்காம் கந்தளயந் திசோ
தவளயந் அம்போதிமுத்வேலயந்
கோகா நாகுலயந்தம: பளயந்
இந்து: ஸமுஜ்ஜ்ரும்பதே.

[அதாவது, அல்லிமலர்களை இரக்கமின்றி வாடச் செய்துகொண்டும், யௌவனபருவத்திலுள்ள ஆடவர்களின்மனத்தை ஆகுலயப்படுத்திக்கொண்டும்,கமலமலர்களைக் குவியச்செய்துகொண்டும், மான்விழியாரின் மானத்தை அடியோடழித்துக்கொண்டும், வையகத்தின்மேல் தன் வெண்ணிலவை மனோகரமாய்ப் பரப்பிக்கொண்டும், சகலதிசைகளையும் தன் வெண்சோதியால் ஒளிரச்செய்துகொண்டும், சக்ரவாகப்பட்சிகளை விரக வேதனையால் வருத்திக்கொண்டும் இருட் கூட்டத்தை விழுங்கிக்கொண்டும் சந்திரன் வெகு கம்பீரமாய் உதித்தெழுகின்றான்.]

இப்படி அவள் பாடிமுடித்தவுடன் மாதவன் சொல்லுவான்:—
இந்தக்கவி பாடினவன் சந்திரனுடைய குணங்களையெல்லாம் சரியாய் அறிந்தவன் என்று எனக்குத் தோற்றவில்லை."

"அதெப்படி ?" என்றாள் இந்துலேகை.

"எப்படியென்றால்" என்றாரம்பித்துச் சொல்லத்தொடங்கினான் மாதவன். "'மான்விழியாரின் மானத்தை அடியோடழிக்கின்றவன்' என்று சொல்லப்பட்ட குணம் உண்மையிலேயே சந்திரனுக்கிருந்த பட்சத்தில், அதை அவன் இப்போது இங்கே வெளிப்படுத்தமாட்டானா?"

இந்துலேகை சிரித்துக்கொண்டு சொல்வாள் "அப்படியானால் இன்னொரு சுலோகம் சொல்லுகிறேன் கேள்:—
"யாமினீ காமினீ கர்ணகுண்டலம் சந்திரமண்டலம்
மார நாராச நிர்மாண சாணசக்ர மிவோதிதம்"

(அதாவது, இரவென்னும் அணங்கு காதிலணியும் கம்மலாகிய சந்திரமண்டலமானது மன்மதனுடைய பாணத்தைத் தீட்டுவதற்கான சாணைக்கல்லென உதயமாயிற்று.)

அதைக்கேட்டு மாதவன், "மன்மதனுடைய பாணங்கள் மாதர்களின் நெஞ்சங்களைப் பிளப்பது சில நாளாய் நின்றிருக்கிறது போல் தோற்றுகிறது" என்றான்.

அதற்கு இந்துலேகை, "ஆமாம், மாதர்கள் மிருதுவான நெஞ்சமுடையவர்களோ அல்லவோ? அவர்கள் அச்சங்கொண்டு அடங்கிப்போகிறவர்கள் தானே. ஒருவேளை காமதேவனே எங்கள்மேல் இரக்கங்கொண்டு வருத்தாமல் விட்டுவிட்டிருந்தாலும் இருக்கலாம்" என்றாள்.

மாதவன், "ஓ! அப்படியா அது? அப்படியிருக்கும்பட்சத்தில் அந்தக் காமதேவன் ஒரு துஷ்டன் மாத்திரமல்ல, கபோதித்தனமுள்ள மடையனென்றும் சொல்வேன். மாதர்களிடத்தில் அநுக்ரஹத்தால் அவர்களை அவன் வருத்தாமல் விட்டுவிட்டானென்றால், புருஷர்களைமாத்திரம் வதைப்பதில் அவனுக்கென்ன லாபம்? புருஷர்களைமாத்திரம் பிரயோஜனமில்லாமல் எதற்காக உபத்திரவம் பண்ணவேணும்?"

இந்துலேகை: "அதில் ஏதோ ஒரு சூட்சமம் இருக்கிறது. அதாவது, புருஷர்களை உபத்திரவம் செய்தால், அவர்கள் ஸ்திரீகளைவிட அதிக பலவான்களாதலால், மன்மதனுக்கு எவ்வித சிரமமும் கொடுக்காமல் தாங்களே ஸ்திரீகளை உபத்திரவித்து ஜெயித்துவிடுவார்களென்று யோசித்தே காமதேவன் இப்படி செய்திருக்கக்கூடும். அதிருக்கட்டும், இதோ பார்! நான் ஒரு முல்லைமாலை கொண்டுவந்திருக்கிறேன். இதை இன்று நானே கட்டினேன். இதில் நாயகமணியாகக் கட்டியிருக்கின்ற இந்தத் தாமரைப்பூவை நானே இன்று விடியற்காலத்தில் பூவள்ளியிலுள்ள மேலண்டைக்குளத்திலிருந்து பறித்துக்கொண்டுவந்தேன். இந்த மாலையை மாதவன் குடுமியில் முடித்தால் அழகாயிருக்கும்; இதை வாங்கிக்கொள்."

மாதவன் அந்த மாலையைத் தன் கையால் வாங்கிக்கொண்டான். அப்படி வாங்கும்போது, அவன் கை துடித்ததைக்கண்டு அதற்குக் காரணம் என்னவென்று இந்துலேகை கேட்டாள்.

மாதவன் (அந்த மாலையிலுள்ள தாமரைப்பூவைக் காட்டி) "காமபாணம் தான் காரணம்" என்று சொல்லிவிட்டுப் பிறகு "வெறும் பயத்தினால்தான் என் கைதுடித்தது" என்றான்.

இந்துலேகை சிரித்தாள். மாதவனோ அந்த மாலையைக் கையிலெடுத்து அதைப் பார்த்துக்கொண்டே பின்வருமாறு பாடலானான்.

"சோபா ஸர்வதமஸ்வமேஷாம் ப்ரதமபஷ்ருதம்
யம்தயொ லோசநாப்பரம்;
மாத்வீமாதுர்யஸாரஸ்தவ கலவசஸா
மார்தவம் தவலப்ரதீகை:

ஸ்தானப்ரம்சோ மஹீயார், அபீத
 விரசிதஸ் தத்ரமுகஸ்பர்திநாம் லைவ
பத்மாநாம் பர்தநாத் தவம் விரம வர்தநோ
 பிஷ்டபேஷேணகிம்ஸ்யாத்"

(அதாவது, இந்தத் தாமரைப்பூவின் எழிலையெல்லாம் உன் கண்களால் அபஹரித்துவிட்டாய்; அதன் இதழ்களிலுள்ள மதுவை உன் மதுர வசனத்தால் கொள்ளைகொண்டுவிட்டாய்; அதன் மேன்மையை உன் மிருதுவான அங்கங்களால்கவர்ந்துகொண்டாய்; சுருங்கக்கூறில், அந்தத் தாமரையையே அதன் ஸ்தானத்திலிருந்து பறித்துவிட்டாய். ஆகவே, மெல்லியலே, இனியும் அதைக் கசக்கிவிடாமல் கருணைபுரிவாய்).

இந்துலேகை: "ஆகா, ஒன்றுந்தரமான சுலோகம். எனக்கு அதை நீ சொல்லிக்கொடுக்கவேணும்.'

மாதவன்: "இந்த மாலையில் ஒரு சிறிய பாகத்தை எடுத்து என் குடுமியில் வைத்துக்கொள்ளுகிறேன். மற்றது முழுவதும் இந்துலேகையின் கூந்தலில் சூட்டுவதற்கே யோக்கியமானது.

இந்துலேகை: "யோக்கியதை இருக்கட்டும் இல்லாமல்போகட்டும், நீ உன் இஷ்டப்படி செய்யலாம்."

"அப்படியானால் என் இஷ்டப்படி செய்ய எனக்கு உத்தரவு கொடுப்பாயா?" என்றான் மாதவன்.

"ஆகா, இந்த மாலை சம்பந்தப்பட்டவரையில் உன் இஷ்டப்படி செய்ய யாதோர் ஆட்சேபமுமில்லை" என்றாள் இந்துலேகை.

அதன்மேல் மாதவன் அந்த மாலையில் ஒரு துண்டு எடுத்துத் தன் முடியில் வைத்துக்கொண்டு, பிறகு, மற்றதைக் கையில் பிடித்துக்கொண்டு, இந்துலேகையின் முகத்தை முழுவதும் உற்றுநோக்கி "இந்துலேகா, இந்தப் புஷ்பசரத்தை நானே உன் கூந்தலில் சூட்டட்டுமா?" என்று கேட்டான்.

"என் கூந்தலிலா?" என்றாள் இந்துலேகை.

"ஆமாம்" என்றான் மாதவன்.

"அதுவும் மாதவன் கையினலா?" என்றாள் இந்துலேகை.

"ஆமாம்" என்றான் மாதவன்.

இந்துலேகை ஒன்றும் பேசாமல் மந்தஹாஸம் புரிந்து நிற்க, மாதவன் புஷ்பஸரத்தை அவள் கூந்தலில் சூட்டினன்.

இந்துலேகை சற்றுநேரங்கழித்து, "மாதவா, நாம் சுத்த அசடுகள்; நாம் என்னதான் அத்தான் அம்மங்கார் பாத்தியமுள்ளவர்களாயிருந்து பாலியம் முதல் ஒன்ருய் விளையாடிக்கொண்டு வளர்ந்துவந்தாலும், எப்போதுமே நாம் குழந்தைகளென்று எண்ணிக்கொள்ளக்கூடாது" என்றாள்.

"உன் கூந்தலில் நான் புஷ்பத்தைச் சூட்டிய போது உன்னைக் குழந்தையென்று நான் ஒருபோதும் நினைக்கவேயில்லை. நல்ல யௌவன புருஷனென்றே எண்ணிக்கொண்டிருந்தேன்" என்றான் மாதவன்.

"நீ அப்படி நினைத்திருக்கும்பட்சத்தில், என்னை எப்படித் தொடக்கூடும்?" என்று கேட்டாள் இந்துலேகை.

"உனக்குத் தெரிந்துதானே உன்னைத் தொட்டேன்?"

"அதுதானே நான் அக்கிரமமென்பது" என்றாள் இந்துலேகை.

மாதவன் (கண்ணில் நீர்பெருக), "என்னை ஏன் இப்படி அலைக்கழிக்கிருய்? நீ இல்லாமல் அரைநிமிஷமும் இந்த பூமியிலிருக்க எனக்கு மனமில்லை" என்றான்.

இந்துலேகை (நெஞ்சத்தில் எழுந்த வியசனத்தை ஸ்திரமாய் அடக்கிக்கொண்டு) "நான் இல்லாமல் நீ இருக்கவேண்டுமென்று யார் சொன்னர்கள்?" என்றாள்.

"'இல்லாமல்' என்ற வார்த்தையைச் சொல்லும் போது நான் உத்தேசித்த அர்த்தத்தைக்கொண்டுதானே நீயும் சொல்லுகிருய்?" என்றான் மாதவன்.

"நீ உத்தேசித்த அர்த்தமென்ன?"

"'நீ இல்லாமல்' என்று நான் சொன்னதன் அர்த்தம், இரவும் பகலும் சதாகாலமும் உன்னுடன் கூடவே இருப்பதாலுண்டாகும் சந்தோஷமும் பாக்கியமுமில்லாமல் என்பதே" என்றான் மாதவன்.

"வெகு நேரமாய்விட்டது" என்றாள் இந்துலேகை; பனியும் அதிகமாய்ப்பெய்கிறது. மாதவா நீ போய்ப் படுத்துக்கொள். நாளை காலையில் எழுந்தும் என்னோடு ட சாப்பிடுவதற்கு வா."

"எனக்குத் தூக்கங்கொள்ளவில்லை" என்றான் மாதவன், "உடம்பும் உள்ளமும் உடைந்தவன் போலிருக்கிறேன்."

"அப்படியானல் கொஞ்சம் மருந்து சாப்பிடுகிறதுதானே. நோயைத் தணிக்கும்படியான நல்ல மருந்தாய்ச் சாப்பிடவேண்டும்" என்றாள் இந்துலேகை.

"எனக்கு அப்படிப்பட்ட ஒரு மருந்து தெரியும்" என்றான் மாதவன், "வைத்திய நூற்பிரமாணப்படி அதை உட்கொள்ளும் முறை மாத்திரம் தெரிந்துகொண்டிருக்கிறேன். முறையைச் சொன்னல் மருந்து கொடுப்பையா?

"ஏதோ அந்த முறையைச்சொல், கேட்கலாம் என்றாள் இந்துலேகை.

(இன்னும் வரும்)

## சிறுவர்க்கான பக்கங்கள்

**CHILDREN'S PAGES**

---

விட்டகுறை அல்லது ஜன்மாந்திர ஸுகிருதம்.—ஒரு குருவும் அவர் சிஷ்யன் ஒருவனும் அநேக ஸ்தலங்களுக்குச் சென்று யாத்திரை செய்துகொண்டு வருகையில் வழியில் குருவுக்கு ஒரு பெரிய வியாதி கண்டது. இதனுடன் அவர் கஷ்டப்பட்டுக்கொண்டு சிஷ்யனால் ஸஹாயம் செய்யப்பட்டு வந்துகொண்டிருக்கையில் ஓர் பறச்சேரியண்டை இருவரும் வரும்படி நேர்ந்தது. அப்பொழுது குருவுக்கு தாகம் அதிகரிக்கத் தமது சிஷ்யனை அவர் தண்ணீர்கொண்டுவரும்படி ஏவினார். அவன் எங்குஞ் சுற்றிப்பார்த்தும் தண்ணீர்கொடுக்கத் தகுந்தவர் ஒருவரும் இல்லாதது கண்டு குருவிடம்வந்து ஸங்கதியைச் சொல்ல, அதற்கு அவர் 'நாம் இப்பொழுது எங்கேவந்து சேர்ந்திருக்கிறோம்? என்று கேட்டார். அதற்கு சிஷ்யன் இது ஒரு பறச்சேரி. அதனால்தான் நமக்குத் தண்ணீர் கொடுக்கத் தகுந்தவர் இங்கு ஒருவரும் இல்லை' என்று சொல்ல, குரு 'அப்பா! நானோ வியாதியால் வருந்துகிறேன். எனக்கோ மரணதாகம்போல கொடியதாகம் வந்திருக்கிறது. பறையரிடமிருந்தாவது தண்ணீர் வாங்கிவா' என்று மிகுந்த தாழ்ந்தகுரலில் கேட்டார். உடனே சிஷ்யன் ஓடோடியும் போய்த் தண்ணீர் வாங்கிவருவதற்குள் குரு தேகத்தை நழுவவிட்டார். சிஷ்யனுக்கு அடங்கா துக்கம் வந்துவிட்டது. 'நாம் எவ்வளவு ஞானம்படித்து என்னபயன்? ஆபத்காலத்தில் முதலிலேயே பறையரிடமிருந்து தண்ணீர் வாங்கிவராமல் போனோமே? இந்த புத்திஹீனத்திற்காக நமது அருமையான குருவை இழக்கும்படி நேர்ந்ததே!' என்று சிஷ்யன் மனம் உருகி உருகி, முடிவில் மனம் உடைந்து இறந்தான். குரு பறையரிடமிருந்தாவது நமக்குத் தண்ணீர்வாராதா? என்று பறச்சேரி ஞாபகத்தோடும், சிஷ்யன் சிறந்த குருபக்தி உருக்கத்தோடும் இறந்ததனால்,

எப்பொருளைச் சிந்திப்பான்
இவ்வுடல் விட்டேகும்போ
தப்பொருளை யேயொருவன்
ஆர்ந்திடுவான்—பொற்பினவன்
எப்பொழுதும் சிந்தித்
திருந்திடலால் அந்நினைப்பைச்
செப்பியவில் வுண்மையினைத் தேர்.

என்ற கீதாவாக்கியத்தின்படி குருவுக்கு பறையன் ஜன்மமும், சிஷ்யனுக்கு அந்த ராஜ்யத்து அரசன் ஜன்மமும் கிடைத்தன.

குரு பறையனாக பிறந்தபோதிலும் விட்டகுறையால் முன்ஜன்மமுடிவில் ஏற்பட்ட எண்ணவிசேஷத்தால் தாழ்ந்த ஜன்மம் வந்தது என்ற ஞாபகம் அவருக்கு நன்றாக இருந்தது. ஆதலால் பிறந்தது முதல் குழந்தைவாயைத்திறந்து சப்தம்போடாமலே இருந்துவிட்டது. வயதாயும் அந்தச்சிறுவன் மற்றையச் சிறுவர்களோடு விளையாடுவதும் இல்லை. தனது வாயைத் திறப்பதுமில்லை. ஆதலால் அவனை எல்லோரும் ஊமை என்றும் மக்கு என்றும் எண்ணிவிட்டனர். அச்சிறுவனோ பூர்வஜன்ம ஞாபகத்தால், அதிகமாகப் பழகி பறையரோடு கலந்து கடவுளை மறந்து தத்தளித்து மறுபடியும் ஜன்மத்திற்கு ஆளாகாதிருக்கவேண்டுமே என்று பயந்து அவ்வாறிருந்துகொண்டு பகவத்யானம் செய்துகொண்டிருந்தான். இந்த ரகஸ்யத்தை மற்றையவர்களால் எவ்வாறு அறியமுடியும்? அரசன் குழந்தையாகப் பிறந்த சிறுவனும் பூர்வஜன்ம ஞாபகத்தால், 'நாம் செய்த குருபக்தி விசேஷத்தால் அல்லவோ நமக்கு இந்தச் சிறந்த பதவி கிடைத்தது. இதைக்கொண்டே நாம் ஏமாறாது பகவத்கிருபையைப் பூர்ணமாகப் பெற முயலவேண்டும். நமது குரு எங்கு வந்து பிறந்திருக்கிறாரோ? எப்படியாவது நம்மை அவர் வந்து காப்பாற்றுவார்' என்ற எண்ணங்களோடு மிகுந்த சிஷ்டனாகவும், ஸதாசாரத்தோடு கூடினவனாகவும் சத்த மனதுடையவனாகவும், அவன் தன் காலத்தை புத்தி தெரிந்ததுமுதல் கழித்து வருவானாயினன்.

இப்படி இருக்கையில் காலக்கிரமத்தில் இந்தப் பிள்ளைக்குப் பட்டம் வர அவனே அந்த ஊர் அரசன் ஆனான். அப்பொழுது தன் ஊர் பறச்சேரியில் ஒரு பறையன் பிறந்தது முதல் மக்காகவும், ஊமையாகவும் இருக்கிறான் என்று அவன் கேள்விப்பட்டான். உடனே அவன் மனம் சற்று இளகியது. என் இந்த ஸங்கதி கேட்டதும் தன் மனம் உருகியது என்று மாத்திரம் அவனுக்கு விளங்கவில்லை. அந்த மக்கின் தகப்பன் தினம் நடு இரவில் பறையறைந்துகொண்டு ஊராரை ஜாக்ரதைப்படுத்துபவன் என்றும் தெரியவந்தது. அதுமுதல் அரசன் தன் மனைவியோடு மேல் உப்பரிகையில் இரவில் பறையன் வந்து போமளவும் இருந்துவிட்டு படுத்துக்கொள்ளப் போவது என்று தீர்மானித்துவிட்டான்.

ஒருவேளை அந்த மக்கு ஓர் இரவு வந்தாலும் வருவான். அப்பொழுது அவன் வாயிலிருந்து வரும் சொல் என்னமாக இருக்கும் என்று பார்க்கவேண்டும்' என்ற ஆவலினாலே இவ்வாறு அரசன் செய்தான். அரசன் மேல் உப்பரிகையில் தன்மனைவியோடிருந்தபோதிலும்,

"எத்தொழிலைச்செய்தாலும் ஏதவத்தைப்பட்டாலும்
முத்தர்மன மிருக்கும் மோனத்தே—வித்தகமாய்க்
காதிவிளையாடியிரு கைவீசிவந்தாலும்
தாதிமனம் நீர்க்குடத்தே தான்."

என்ற பட்டினத்து அடிகள் வாக்கின்படி அரசன் மனம் விட்டகுறையின் விசேஷத்தால் நிஷ்டையையே மேவிநின்றது.

இவ்வாறு கொஞ்சநாள் நடந்துவருகையில் ஒருநாள் லோந்துசுற்றும் பறையனுக்கு தாபஜ்வரம் கண்டது. அன்று ஸாயங்காலம் தன் தொழிலைத் தன்னால் செய்ய அன்று முடியாமற் போய்விட்டதே என்றதுக்கம் அவனுக்கு வந்தது. அப்பொழுது தன் எதிரே ஊமையாகிய மக்கைக் கண்டதும் 'நமக்குப் பிள்ளை இருந்து என்ன பிரயோசனம்? இந்த ஸமயத்தில் அவனால் என்னவேலையைச் செய்யமுடியும்? இந்தப்பிள்ளை இருப்பதும் ஒன்றுதான், இவன் போனாலும் ஒன்றுதான்' என்று வாய்விட்டுக் கூவித் துக்கிக்கலானான். ஒருநாளும் அசையாது ஊமையாகவிருந்த அந்த மக்கு, தினம் தகப்பன் செய்வதைப் பார்த்திருந்தபடியால் அங்கு ஆணியில் இருந்த பறையை கழுத்தில் எடுத்துமாட்டிக்கொண்டு ஒன்றும்பேசாது, அடிக்கும் கோல்களை எடுத்துக்கொண்டு வீட்டைவிட்டு வெளியேறிவிட்டான். இதைக்கண்டதும் ஜ்வரத்தில் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த தகப்பனுக்கு மிகுந்த திருப்தி உண்டாகிவிட்டது.

மக்கு, மஹாஞானியாதலால் முதலில்கோயில் ஸந்நிதிசென்று, பகவானைத் தெரிசித்துவிட்டு கீழ வீதியில் பறையடித்துக்கொண்டு நடுநிசியில் புறப்பட்டான். சற்றுநேரம் அடித்துவிட்டு,

சனித்தலுந் துக்கம் சரையுறலுந் துக்கம்
மனைக்கிழத்தியுந்துக்க மாரு—தனர்த்தமிகு
* சஞ்சார சாகரமுந் துக்கமா மாதலினால்
துஞ்சாதீர் துஞ்சாதீர் சோர்ந்து

* சஞ்சாரம்—ஸம்ஸாரம்.

என்று உறக்கக்கூவி ஜனங்களை எச்சரிக்கை செய்தான்.

இந்த விஷயத்தைக் கேட்க வேண்டும் என்றே உப்பரிகையில் கொஞ்சநாளாக வாஸம்செய்து வந்த அரசன் காதில் இதுபட்டதும் அவன் மனம் உருகியது. உடனே அவன் ஓர் ஆளை, கீழ்வீதியில் அவன் திரும்பி வருகையில், அவனை அரண்மனைவாயிலில் அழைத்துவரும்படி கட்டளையிட்டு அனுப்பிவிட்டான்.

தெற்குவீதிசென்ற மக்கு கொஞ்சநாழிகை பறையை அறைந்துவிட்டு

பேராசை யாற் * பார் பிணிக்கப்படுகிறது
ஏரார் தொழிலாலு மெண்ணலுஞ்—சோர்வாகி
ஓங்காயு ளின்குறைவை ஓர்வதில்லை யாதலினால்
தூங்காதீர் தூங்காதீர் சோர்ந்து

என்று எச்சரிக்கை செய்தான். அப்பால் மேற்கு வீதிசென்று

காமன் குரோதன கடுலோப னென்கின்ற
நாமத் திருடர்பலர் ஞானமணி—தாமிங்
கொழித்துக் கவர வுடலுற்றார் இன்னே
விழிக்க விழிக்க விரைந்து

என்று கூவிவிட்டு தெற்குவீதி வந்தான். அங்கு மிகுந்த ஆவேசத்துடன்

தாயில்லை தந்தையில்லை சார்சோ தரரில்லை
எய கிளைஞர்கள் யாருமில்லை—நேயங்
கெழுமு பொருளில்லை கிருகமில்லை யென்றோர்ந்து
ஒழியின் ஒழியின் உறக்கு

என்று எச்சரிக்கை செய்துவிட்டு கீழ்வீதி வருகையில் பரவசமாகித் தாண்டவமாடிக்கொண்டும்

தந்தை கடவுளே தாயவன் வல்லமையே
அந்தமிலாச் சுற்றம் அவனடியார்—சொந்த
இடமாகு மூவுலகு மென்று மகிழ்வுற்று
மடமாவதற்று நெஞ்சே வாழ்

என்று பாடிக்கொண்டும் மெய்ம்மறந்துவந்தான். அங்கு தயாராக இருந்த ஆள் அரசன் உத்திரவைக் கூறி அவனை அரண்மனைவாயில் கொண்டுவந்துவிட்டான.

அரசன் மிகுந்த பரபரப்புடன் ஓடோடியும்வந்து பார்த்தான். அவர்கள் கண்கள் கலந்துவிட்டன. 'பிரிந்தவர் கூடினால் பேசலும்வேண்டுமோ? மெய்ம்மறந்து அடியற்ற தண்டம்போல மக்கின்பாதத்தில் அரசன் வீழ்ந்தான்.

இருவருமாக போனவிடம் இன்னது என்று தெரியாமலே போய்விட்டனர். இருவரும் சேர்ந்து, பகவானிடம் நிஷ்டையிலிருந்து விட்டகுறை, வந்து தொட்டுக்கொள்ள அந்தஜன்மத்திலேயே முத்திப்பேற்றை அடைந்தனர் என்று நாம் சொல்லவும் வேண்டுமோ?

ஓம் தத்ஸத்

* பார்—உலகம்.